## இறை திருக்காட்சி

கரும்பிலின் சாற்றைக் கனிந்தமுக் கனியைக்
கருதுகோற் றேன்நறுஞ் சுவையை
அரும்பெறல் அமுதை அறிவைஎன் அன்பை
ஆவியை ஆவியுட் கலந்த
பெருந்தனிப் பதியைப் பெருஞ்சுகக் களிப்பைப்
பேசுதற் கரும்பெரும் பேற்றை
விரும்பிஎன் உளத்தை இடங்கொண்டு விளங்கும்
விளக்கினைக் கண்டுகொண் டேனே !

—திருஅருட்பா-3967

4-3

# திருப்பள்ளி எழுச்சி


• சரவணானந்தா •







இராமலிங்கர் பணி மன்றம்
31, போயசு தோட்டம், சென்னை-600086



திரு அருட்பிரகாச வள்ளலார்
(30—1—1874ல் முத்தேக சித்தி பெற்றவர்)

# அணிந்துரை

நா. மகாலிங்கம்
(இராமலிங்கர் பணிமன்றத் தலைவர்)

நம்முடைய இந்தப் புண்ணியப் பெருநாட்டில் இறைவன் அனுபவத்தைப் பெறுவதற்காகவே பல்வேறு ஞானிகள் பல் வேறு மார்க்கங்களை நமக்கு வகுத்துக்கொடுத்திருக்கிறார்கள்.

இந்த ஞானிகளில் மாணிக்கவாசகரும், திருஅருட்பிரகாச வள்ளலாரும் மிக முக்கியமாக நமக்குக் காட்டிய வழி சன்மார்க்கமாக இருக்கின்றது.

மாணிக்கவாசகரும் திருஅருட்பிரகாச வள்ளலாரும் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களில் சன்மார்க்கத்தின் விளக்கத்தைத் தெளிவாகக் காணலாம்.

ஒவ்வொரு மனிதனின் சிரநடுவிலும் இறைவன் ஒளி வடிவமாய் இருக்கிறார். அங்கு இறைவன் இருந்து அந்த மனிதனை இயக்கி வருகிறார் என்ற உண்மையை மனிதன் உணராமல் செயல்பட்டு வருகிறான்.

இதனால் மனிதனின் சிரநடுவில் இறைவன் இருந்தாலும், அவனால் உணரப்படாமல் இருப்பதால், இறைவனின் அருள் செயல் வெளிப்படாமலேயே, அவன் சிரநடுவிலேயே அடை பட்டுக் கிடக்கிறது. சிரநடுவில் அடைப்பட்டு இருக்கும் இறைவனை எழுப்பி அவன் அருளைப் பெறுவதற்காகவே, மாணிக்க வாசகரும், திருஅருட்பிரகாச வள்ளலாரும் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

மாணிக்கவாசகர் தம் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களின் மூலமாகத் தம் சிரநடுவில் இருக்கும் இறைவனை எழுப்பி அவன் அருளைப் பெற்று அவனுடனேயே கலந்துவிடுகிறார்.

திருஅருட்பிரகாச வள்ளலாரோ தம் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் மூலமாகத் தம் சிரநடுவில் வீற்றிருக்கும் இறைவனை எழுப்பி, அவன் திருஅருளைப் பெற்று உலக உயிர்களுக்குப் பணி புரிந்துகொண்டிருக்கிறார். அதாவது இறைவனை அனுபவித்தவண்ணம் பேரின்பப் பெருவாழ்வில் முத்தேக சித்தியுடன் விளங்கி வருகிறார்.

வாழையடி வாழையாக வந்த நமது நாட்டு ஞானிகள் ஒவ்வொருவரும் இறை அனுபவத்தை உணர்ந்து, அந்த அனுபவ நெறிகளை மேலும் மேலும் ஆய்ந்து அவைகளை வளர்த்துக்கொண்டே வந்திருக்கிறார்கள்.

அவர்களில் மாணிக்கவாசகர் தமக்கு முன்னிருந்த ஞானிகளைவிட இறைஅனுபவத்தில் உயர்ந்து நிற்கிறார்.

மாணிக்கவாசகர் காலத்திற்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் வந்த திருஅருட்பிரகாச வள்ளலார் மேலும் உயர்ந்து செல்கிறார். இறைவனுடன் கலந்துபோகாமல், இறைவனுடன் இணைந்து அவரை அனுபவித்துக்கொண்டு இருக்கிறார்.

தாம் இறைவனை அனுபவித்துக்கொண்டிருப்பதுபோல, உலக மக்கள் எல்லோரும் இறை அருளைப்பெற்று அனுபவித்து வாழவேண்டுமென்று தம் அனுபவங்களை எல்லாம் திருஅருட்பாவில் பாடி வைத்திருக்கிறார்.

இதில் அவர் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் மிக முக்கியமானவை. அவை இறைவனை அடைந்து அனுபவிக்கும் வழியைக் கூறுவனவாகும்.

மாணிக்கவாசகர் இறைவனைத் தம் திருப்பள்ளியில் இருந்து எழப் பாடும்போது, பள்ளியிலிருந்து ''எழுந்து அருளாயே!'' என்று இறைவனை மனம்உருகி வேண்டுகிறார்.

மாணிக்கவாசகர் உபயோகித்திருக்கும் "எழுந்து அருளாயே!" என்ற சொற்றொடர் "எழுந்து அருள்வாய்!" என்ற பொருளைத் தருவதோடு "எழுந்து அருளமாட்டாய்!" என்று பொருளையும் தந்துவிடுகிறது.

வள்ளலாரோ தம் திருப்பள்ளி எழுச்சிப் பாடலில் "எழுந்து அருள்வாய்!" என்ற சொற்றொடரையே உபயோகித்திருக்கிறார். "எழுந்து அருள்வாய்!" என்ற சொற்றொடர், எழுந்து அருளவேண்டும் என்ற ஒரே பொருளைத் தான் தரும். எதிர்மறைப் பொருளைத் தராது.

இந்த விளக்கத்தைத் திருப்பள்ளி எழுச்சிப் பாடலுக்கு உரை விளக்கம் எழுதியிருக்கும் சுவாமி சரவணனந்தா அவர்கள் இந்நூலில் அழகாய் விளக்கி இருக்கிறார்கள்.

தமது திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களுக்குச் சிறப்பான விளக்கம் தருவதற்காக 'பற்றறுத்தல்' என்ற பதிகத்தை வள்ளலார் பாடியிருக்கிறார். அதனால் பற்றறுத்தல் பதிகத்தில் உள்ள பதினொரு பாடல்களுக்கும் விளக்கம் எழுதி இந்நூலில் இணைத்திருக்கிறார் சுவாமி சரவணனந்தா அவர்கள்.

இந்தப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் முடிவிலும் "எனைப்பள்ளி எழுப்பி மெய் இன்பம் தந்தீரே!" என்று திருஅருட் பிரகாச வள்ளலார் சொல்கிறார்.

திருப்பள்ளி எழுச்சியில் இரண்டு நிலைகள் உண்டு. முதல் நிலை நம் சிரநடுவில் இருக்கும் இறைவனை உணர்ந்து அவரை எழுப்பிக் கொள்வது.

இந்த முதல் நிலையை மாணிக்கவாசகர் போன்ற ஞானிகள் பெற்று அனுபவித்து வந்திருக்கிறார்கள். அவர்கள் தூல உடம்பில் இருந்த வரையில் இந்த இறை இன்பத்தை அனுபவித்து வந்தார்கள். அவர்கள் தூல உடம்பு மறைந்தவுடன் அவர்கள் பெற்றிருந்த இறை இன்பமும் அவர்கள் தூல உடம்போடு போய்விடுகிறது என்பதை சுவாமி சரவணனந்தா அவர்கள் இந்த நூலில் விளக்கிக் கூறுகிறார்கள்.

இரண்டாவது நிலை சிரநடுவில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் சிரநடுவில் இருந்து வெளிப்பட்டு அனக மாக விரிந்து நிலைத்த இன்பத்தைத் தருவது.

இறைவன் உள்ளும் புறமும் அனகமாக விரிந்து தமக்கு அருள் புரிந்திருப்பதை வள்ளலார் தமது திருப்பள்ளி எழுச்சிப் பாடலில் விளக்கிக் காட்டுகிறார்.

இறைவன் தம்முள் இருந்து அனகமாக விரிந்து தம் உடலின் ஒவ்வொரு அணுவிலும் தங்கி தமக்கு மெய்யின்பம் தருவதையும், அந்தப் பேரின்பத்தை உயிர்க்குலம் எல்லாம் பெறுவதற்காகத் தாம் பரோபகாரப்பணி புரிந்து வருவதை யும் 'பற்றறுத்தல்' என்ற பதிகத்தில் விளக்கிச் சொல்கிறார் திருஅருட்பிரகாச வள்ளலார்.

மெய் இன்பம் பெறுவதற்கான வழியையும் பற்றறுத்தல் பதிகப் பாடல்களில் விவரிக்கிறார். உடல், பொருள், ஆவி மூன்றையும் இறைவனிடம் பரிபூரணமாகச் சமர்ப்பிப்பதன் மூலமாகவே இறைவனின் பேருளைப் பெற முடியும் என்று வலியுறுத்திச் சொல்கிறார்.

இறைவனின் பேரருளால் பெறக்கூடிய பேரின்பத்தின் தன்மைகளையும் அதை அடையக்கூடிய நிலைகளையும் சுவாமி சரவணனந்தா அவர்கள் மிகுந்த ஆற்றலுடன் இந்த நூலில் விளக்கிக்கொண்டே போகிறார்கள்.

சுவாமி சரவணனந்தா அவர்களைப்பற்றிச் சன்மார்க்க உலகத்துக்கு நான் அறிமுகப்படுத்த வேண்டியதில்லை.

சென்ற ஐம்பது ஆண்டுகளாகச் சன்மார்க்கத் துறையில் ஈடுபட்டு அதில் ஆழ்ந்த பயிற்சி பெற்று வருபவர்கள்.

வள்ளல் பெருமானின் திருஅருட்பாப் பாடல்களை சன் மார்க்கக் கண்கொண்டு ஆய்ந்து வரும் பேரறிஞர் சுவாமிகள்.

வெறுப்பு, விருப்பு இல்லாமல் நமது பழைய சமய மதங் களை ஆராய்ந்துகொண்டு வருகிறார்கள். நமது பழைய

ஞானிகளின் அனுபவங்களிலிருந்து வள்ளலார் எப்படி வளர்ந்திருக்கிருர் என்பதை உலகத்துக்குத் தெளிவாகக் காட்டும் ஆற்றலுடன் விளங்குகிருர்கள்.

சன்மார்க்கத்தின் சாரமான அருட்பெருஞ் ஜோதி அகவலுக்குப் பெரிய உரை கண்ட சன்மார்க்க ஞானி அவர்.

சுவாமிகள் எழுதிய அருட்பெருஞ் ஜோதி அகவல் உரை விளக்கத்தை வெளியிடும் பணியை இராமலிங்கர் பணி மன்றம் மிகுந்த மகிழ்வுடன் மேற்கொண்டது.

வள்ளல் பெருமானின் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை விளக்கும் சுவாமி சரவணனந்தா அவர்களின் ''வள்ளலார் கண்ட ஒருமை வாழ்வு'' என்ற நூலையும்,

சன்மார்க்கத்தின் சிறப்பையும், சத்திய ஞானசபையின் உண்மையையும் விளக்கும் ''சத்திய ஞானசபை'' என்ற அருமையான நூலையும் இராமலிங்கர் பணிமன்றமே அச்சிட்டு ஆனந்தமடைந்தது.

இப்போது மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடலையும், திருஅருட் பிரகாசவள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடலையும் ஒப்பிட்டு 'திருப்பள்ளி எழுச்சி' என்ற தலைப்பில் மிக அருமையான ஆய்வு நூலை சுவாமி சரவணனந்தா அவர்கள் எழுதியிருக்கிருர்கள்.

இதுவரையில் சமயத்துறையையும், சன்மார்க்கத் துறையையும் மறைத்திருந்த திரைகளை நீக்கி, சுத்த சன்மார்க்கத்தையும், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரையும், அனக வாழ்வின் பெருமையையும் இந்த நூலில் தெளிவாகச் சொல்லியிருக்கிருர் சுவாமி சரவணனந்தா அவர்கள்.

இது தமிழ் அறிந்த ஒவ்வொருவரும் படித்துப் பயன் பெறவேண்டிய ஒப்பற்ற சன்மார்க்க நூல்.

அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணையால் இந்த நூல் வெளி வருகிறது.

மனிதப் பிறவியின் குறிக்கோளை உணர்ந்து பயனடைவதற்கு இந்த நூல் மிகவும் உதவி புரியும்.

இந்த நூலை இராமலிங்கர் பணிமன்றத்தின் மூலமாக வெளியிடுவதைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்.

அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப்பெருங்கருணை! அருட்பெருஞ்ஜோதி!

31, போயசு தோட்டம்
சென்னை—600086.

**நா. மகாலிங்கம்**
8.10.78



ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஏழாம் ஆண்டு ஜூன் மாதம் பத்தொன்பதாம் தேதி புதிதாகத் திருப்பணி நிறைவு பெற்ற சத்திய ஞானசபை.

# திருப்பள்ளி எழுச்சி

முன்னுரை

அருட்பெரும் ஜோதியாய்த் தனிப்பெருங் கருணையுடன் விளங்கும் கடவுளை உலகம் கண்டு அனுபவிக்க வேண்டிய தருணம் வந்து விட்டது.

அருட்பெரும் ஜோதியைத் தனிப்பெருங் கருணையாகப் பார்ப்பது ஒன்றுதான் கடவுள் தத்துவம். இதுதான் எல்லாவற்றுக்கும் ஆதார சக்தி. இந்தச் சக்தியின் மூலமாகத் தான் எதையும் அனுபவிக்க முடியும்.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் தத்துவம்தான் நம் உயிருக்கும் உணர்வுக்கும் உயிராக இருப்பது. நம் சிரநடுவில் இருக்கும் ஞான பீடத்தில் அருட்பெருஞ் ஜோதியை எழுந் தருளப் பண்ணுவதற்காகவே சத்விசாரத்துடன் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்கள் பாடப்படுகின்றன.

தம்உள் சிவஜோதியாக எழுந்த கடவுளால் தாம் பெற்ற சிவானந்த அனுபவத்தை மாணிக்கவாசகர் தம் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களில் விளக்குகிறுர்.

கடவுள் திருப்பள்ளியில் இருந்து எழுந்து காட்சி அருளி யதும் தாங்கள் எத்தனையோ அனுபவங்களை அடைந்ததாகப் பல ஞானிகள் கூறி இருக்கிறுர்கள்.

வள்ளல் பெருமானே சுத்த சன்மார்க்கப் பேரருள் வலத் தால் கடவுளை அருட்பெருஞ் ஜோதியாகவே நம் உள் எழுப் பிக்கொள்ளக்கூடும் என்கிறுர். தாம் பெற்ற இந்த அருள்

அனுபவத்தைத்தான் வள்ளல் பெருமான் தம் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களில் காட்டுகிருர்.

சிரநடுவில் இருக்கும் அருட்பெரும் ஜோதியை நம் உள்ளத்தில் நிறுத்தி அதைத் திருப்பள்ளியில் இருந்து முதலில் எழுந்தருளச் செய்துகொள்ள வேண்டும். பின்னர் அந்த அருட்பெரும் ஜோதிக்கு நம்மையே அடைக்கலப் பொருளாக்கி விடவேண்டும். இவ்வாறு பற்றற்ற நிலையில் இருக்கும்போது திருவருள் அனகமுற்று நம் வழியாகச் செயல்படும்.

இந்தக் கருத்தைக் காட்டும் வள்ளல் பெருமானின் பற்றறுத்தல் என்ற பதிகத்தையும் இந்தத் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் விளக்கத்துடன் இணைத்து விரிவாக விளக்கி இருக்கிருேம்.

"எனைப் பள்ளியெழுப்பி மெய்யின்பம் தந்தீரே" என்ற வள்ளல் பெருமானின் வாசகம் வெறும் வாய்ச்சொல் அல்ல; கற்பனையும் அல்ல; அவருடைய அருள் அனுபவமாகும்.

வள்ளல் பெருமான் தம் அகத்தில் பள்ளி கொண்டிருந்த அருளொளியை எழுப்பிக் கொண்டார். அந்த அருள் ஒளியுடன் ஒன்றி அதுவாகவே ஆகிவிட்டார். தாமே அருள் ஒளியாகி அழியாமல் இருந்து வருகிருர்.

இதுதான் வள்ளல் பெருமான் பெற்ற அனக அனுபவம். இந்த அனக அனுபவத்தில் கிடைத்த ஆனந்த வாழ்க்கையுடன் நிலைத்து இருப்பவர் வள்ளல் பெருமான்.

அனக வாழ்வைப் பெற்ற வள்ளல் பெருமானைக் காண முடியுமா? முடியும். அதற்கு ஒவ்வொருவரும் அருள் விசாரத்தின் மூலமாகத் தங்கள் உள்ளத்தின் உள்ளே ஆழ்ந்து பார்க்கும் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும்.

அப்போது தங்கள் உள்ளத்தில் அருட்பெருஞ் ஜோதி எழுந்தருளிக் கொண்டிருப்பதைக் காணலாம். அதுதான் திரு அருட் பிரகாசரின் வடிவமும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் வடிவமும் ஆகும்; நம்முடைய ஒவ்வொருவரின் உண்மை வடிவமும் ஆகும்.

தேகப்பற்று சிறிதும் இல்லாமல் நாமும் அருட்பெருஞ் ஜோதியும் ஒன்றி நிற்க வேண்டும். அப்போது அருட்பெருஞ் ஜோதியின் திருப்பள்ளி நிலை கலந்து அதன் அருள் வெளிப் படும். நாமும் அருட்பெருஞ் ஜோதியின் கருணையும் வேறல்ல, ஒன்றுதான் என்ற உண்மையும் நமக்கு விளங்கும் அருட்பெருஞ் ஜோதியின் திருப்பள்ளி எழுச்சியினுல் ஏற்படும் சன்மார்க்கப்பயனையும் அடைந்து மகிழமுடியும்.

இவ்வாறு ஆய்ந்து இறைவனைக் காணும் முறையைத் தெரிவிக்கிற திருப்பள்ளியெழுச்சியை உலகம் மனம் உவந்து. ஏற்றுக் கொள்ள வேண்டும். இதனுல் மக்கள் திருவருளை அடைந்து பேரின்ப நிலையைப் பெறுவார்கள். அவர்களிடம் புதிய ஒளி எழும் அவர்கள் எல்லோரும் ஒத்து உரிமையுடன் வாழ்வார்கள். பேரின்பத்தில் திளைப்பார்கள்.

*மாணிக்கவாசகர் திருப்பள்ளி எழுச்சியும்*
*திருஅருட்பிரகாசர் திருப்பள்ளி எழுச்சியும்*

மெய்ப்பொருளைக் காணத்தக்க அறிவுபெற்று வாழ்கிறவர் கள்தான் மக்கள். அவர்கள்தான் தங்கள் உண்மை நிலை யையும் அறிவார்கள். தங்களுக்கு ஆதாரமாகத் தங்கள் உள்ளே இருந்து தங்களை இயக்குகின்ற ஆண்டவர் உண்மை யையும் அறிவார்கள்.

ஆண்டவர் உண்மையை உள்ளவாறு அறிந்து அடைய என்ன செய்யவேண்டும்? தயா ஒழுக்கத்தோடு இருந்து சத்விசாரம் செய்தல் வேண்டும்.

தயா ஒழுக்கம் என்பது கடவுள் இயல்பாகிய பரோ பகாரத்துடன் வாழ்வதுதான். அவ்வாறு வாழ்ந்து கொண் டிருப்பவர்களுக்கு ஆண்டவர் இயற்கை உண்மை விளங்கும்.

ஒருவர் கடவுள் இயற்கை உண்மையைத் தெரிந்து கொண்டால் மட்டும் போதாது. அது அவருடைய அன்ருட வாழ்க்கை அனுபவமாகவும் மாறவேண்டும்.

இந்த இறை அனுபவத்தைப் பெறுவதற்காகவே பல் வேறு ஞானிகள் பல்வேறு மார்க்கங்களை நமக்கு வகுத்தும் தொடுத்தும் கொடுத்திருக்கிறார்கள்.

அந்த ஞானிகளில் மாணிக்கவாசகரும், திருவருட் பிரகாசரும் வழங்கிய மார்க்கங்களே சன்மார்க்கங்களாக இருக்கின்றன.

மாணிக்கவாசகர் சன்மார்க்கம் சிவசம்பந்தம் உடையது. இதை அவர் இயற்றிய திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் தெளிவாகக் காணலாம்.

திருவருட்பிரகாசர் சன்மார்க்கம் சுத்த சிவ சம்பந்தம் உடையது. இதை அவர் இயற்றிய திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் வெளிப்படையாகக் காணலாம்.

சிவ நிலை, சுத்தசிவ நிலை, என்ற இரண்டு நிலைகளுக்கும் உள்ள அடிப்படையான வேறுபாடுகளைத் தெரிந்துகொண் டால்தான், இறைவனின் இயற்கை உண்மையைத் தெளி வாகப் புரிந்துகொள்ள முடியும்.

**சிவ மார்க்கம்**

பரம்பொருளின் உண்மையை விளக்கும் ஞான நெறியே சன்மார்க்கம்.

பரம் பொருளைச் சிவம் என்றனர் சைவர்கள். மெய்கண் டாரின் சிவ ஞான போத நெறியே சன்மார்க்கம் என்று சைவர்கள் சொன்னார்கள்.

சிவம்–பதி ஆகவும்; ஜீவன்—பசுவாகவும்; உடல் முதலிய உலகப் பொருள்கள்—பாசமாகவும் இருப்பதாகச் சைவசித்தாந்தம் சொல்லுகிறது.

தனக்கென்று தனி சுதந்தரம் இல்லாத உயிர் சிவபெரு மானின் திருவருளாலே, பாசத்தை நீக்கிக் கொண்டு சிவமய மாய் விளங்குகிறது என்கின்றனர் சைவ சித்தாந்திகள். சிவத்துடன் சிவமாகவே ஐக்கியப்பட்டு அதனுள் மறைந்து போவதே சிவானந்த வாழ்வு என்கின்றனர்.

இது சிவ சன்மார்க்கம். இதில் சென்று, சிவ சாயுச்சியத்தில் மறைந்து போகின்ற ஜீவனுக்கு, தனியாக வாழ்வு ஏது? இந்த நிலையைச் சிவானுபவ வாழ்வு என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?

உடலோடு இருக்கும் நிலையைப் 'பெத்த நிலை' என்கிறது சைவ சித்தாந்தம். பெத்த நிலையில்; சிவனோடு ஜீவன் ஐக்கியபாவத்துடன் இருந்த வரையில் அவ்வப்பொழுது அந்த ஜீவனுக்குச் சிவானந்த அனுபவம் கிடைக்கும்.

தேகத்தை அநித்தியம் என்று அந்தத் தேகத்தையே ஒதுக்கித் தள்ளி விட்ட ஜீவனுக்கு சிவானந்த அனுபவம் ஏது? நித்தியானந்த வாழ்வு ஏது?

ஆகையால் சிவ சன்மார்க்கத்தில் பெற்ற சிவப்பேறு, நித்தியானந்த அனுபவம் கொண்டது அல்ல.

ஏகநாயகன் சிவன். அவன் ஒரு ஜீவனைத் தன் அருளால் தன்னிடம் ஐக்கியப்படுத்திக் கொள்கிறான். இதனால் அந்த ஜீவன், தன் நிலையை இழந்து விடுகிறது. அது கடவுளோடு கலந்து விடுகிறது.

அதற்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை.

இந்த நிலையே ஒரு ஜீவனின் முடிவான லட்சியமாகச் சைவ சித்தாந்தம் சொல்லிக் கொண்டிருக்கிறது.

இது ஜீவனுக்குமுடிவான நிலை இல்லை. இதற்கும் மேலே சென்று முடிவு இல்லாமல், மரணமில்லாமல், நிலையான நித்யானந்த அனுபவத்துடன் நிலைபெற்று வாழலாம். இந்த நிலைதான் அருட்பெருநிலை; சுத்த சிவ சன்மார்க்க நிலை. இதுவே வள்ளல் பெருமான் பெற்றிருக்கும் சுத்தசிவ அனுபவ நிலையுமாகும்.

**சுத்த சிவ சன்மார்க்கம்**

சுத்த சிவ சன்மார்க்கத்தில் ஓர் ஆன்மா, சிவ பாவனையில் இருக்கிறது. அது எல்லாவற்றையும் சிவமாகவே காண்

கிறது. இந்த இயற்கை உண்மை நிலையில் அது அருள் மயமாகிறது. அனக வாழ்வு வாழத் தொடங்குகிறது.

அகத்தில் இருந்து அனகமாய் விரிகிறது சுத்தசிவ அருள். அது ஜீவ தேகத்தைத் தன் மயமாக்கிக் கொள்கிறது. ஜீவ தேகத்தை, சுத்தசிவ தேகமாக்கி அதை நிலையான இன்ப அனுபவத்திலும் திளைக்கச் செய்துவிடுகிறது.

இதனால், ஒரு சுத்த சிவ சன்மார்க்கி, தாம் தனிப்பட்டவர் என்ற தற்போத உணர்வை இழக்கிறார். சுத்த சிவானுபவத்தில் மூழ்கித் திளைக்கிறார்.

சுத்த சிவ சன்மார்க்கத்தில் சிவபதியாகிய அருட்பெருஞ் ஜோதியே ஜீவனுடன் ஒன்றி, அதன்உடம்பை சுத்த ஞான உடம்பாக்கி அதனுள் விளங்குகிறார்.

ஒரு ஜீவனே எங்கும் எப்போதும் தன் தனித் தன்மையுடன் இருந்து, சுத்த சிவ அனுபவத்தை அடைவதுதான் சுத்த சிவ சன்மார்க்க லட்சியம்.

திருஅருட்பிரகாச வள்ளலார். ஜீவ நிலையில், இராமலிங்க அடிகளாக இருந்தார்.

சுத்த சிவ அனுபவம் பெற்றபோது இராமலிங்கர் வடிவம் அருட்பிரகாச வடிவமாக மாறிவிட்டது.

அதாவது, கடவுளே திருஅருட்பிரகாச வள்ளலின் வடிவமாகித் தம் ஐந்தொழிலையும் செய்துகொண்டிருக்கிறார்.

இந்தக் கடவுள் பிரகாசமே நம் ஒவ்வொருவர் உள் இருக்கும் ஆன்மாவிலும் இருக்கிறது. அவ்வாறு இருந்து கொண்டு தம் அருள் அனுபவத்தை ஒவ்வொருவருக்கும் தந்துகொண்டிருக்கிறது.

ஒவ்வொருவர் ஆன்மாவிலும் விளங்குகிற அருட்பிரகாச வள்ளலார் அருவமாகிய ஞானதேக நிலையில் இருக்கிறார்.

ஒவ்வொருவரும் அருட்பக்குவம் அடையஅடைய அருட்பிரகாச வள்ளலார் தமது அருவுருவமாகிய பிரணவ தேகத்தையும், உருவமாகிய சுத்த தேகத்தையும் காட்டி ஒவ்வொருவரையும் ஆட்கொள்ள இருக்கிறார்.

சுத்த சிவ சன்மார்க்கத்தில் இராமலிங்கம் என்னும் ஆன்மப் பசுவுக்கு அருட்பிரகாச சிவபதி நித்ய வாழ்வை அளிக்கிறுர். அதைத் தம்முடன் ஒன்றச் செய்து கொள் கிருர். அதுவே தாமாகி, தாமே அதுவாகி திருஅருட் பிரகாச வள்ளலாகவே வாழ்ந்து வருகிருர்.

வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானுல் இராமலிங்க வள்ளலார் மறைந்து போகாமல் அருட்பிரகாசவடிவத்துடன் முத்தேக சித்தி பெற்று விளங்குகிருர். சுத்த சிவ சன்மார்க் கத்தில்தான் நித்தியமான சிவானுபவ வாழ்வு இருக்கிறது. சுத்த சிவானுபவத் தெளிவு நிலை வள்ளலார் வாழ்வின் மூல மாக வெளியாகி இருக்கிறது. இதற்கு முன் சுத்த சிவானந்த அனுபவ நிலையை யாரும் பெறவில்லை.

மாணிக்கவாசகப் பெருமான் சிவ ஜோதியில் கலப்ப தற்கு முன்னுல் ஜீவ தேகத்துடன் வாழ்ந்தபோது சிவபதி யின் அருளால் சிவானந்தப்பெரு நிலையில் இருந்தார். மணிவாசகர் அளவுக்குக்கூட மற்ற ஞானிகள் கடவுள் அனுபவம் பெறவில்லை.

மற்ற மார்க்கங்களில் பல ஞானிகள் அவ்வப்போது இறை அருள்பெற்று ஒரு சில அற்புத சித்திகளோடு விளங்கி மறைந்து போயிருக்கிருர்கள்.

கடவுள் உண்மை, அருள் அனுபவம் பெருத புலன் உணர்வுக்கும், பகுத்தறிவுக்கும் விளங்காதது. அருள் அனுப வத்திற்கு மட்டுமே விளங்கக்கூடியது.

அருள் அனுபவம் பெறுவதற்குப் புறத்திலேயே திரி கின்ற மன உணர்வை அகத்துள் திருப்பி, ஆன்மாவில் பொருந்தச் செய்யவேண்டும்.

இதற்காகத்தான் பலவிதமான தந்திர உபாயங்களை நமது முன்னேர் செய்து கொடுத்திருக்கின்றனர். இந்த முறைகளில் அகநிலை பெற்று நிலைத்திருந்தவர்களிடம் ஓரளவு அருள் ஞானம் வெளிப்பட்டது. அவர்கள் ஒரு சில அற்புத சக்திகளையும் சித்திகளையும் பெற்ருர்கள்.

இவர்களைத் தெய்விக ஆற்றல் படைத்தவர்களாக எண்ணி மக்கள் மதித்தும் போற்றியும் வந்தார்கள். அகநிலை பெற்ற எல்லாரிடமும் அருள் அனுபவம் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது.

மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் இந்த அகநிலைப் பயிற்சியைக் கட்டாயம் பெறவேண்டும். அகநிலையில் இருந்துகொண்டு, ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை யோடு வேண்டினுல் அக விழிப்பு உண்டாகும்.

இதுவே கடவுள் சக்தியின் உள் எழுச்சி. மனிதன் அகத்தில் ஒடுங்கிக் கிடந்த தெய்வப் பண்பு எழுப்பப்படுவது. கடவுள் உண்மை மனிதப் பண்பாக ஒவ்வொருவர் உள்ளே யும் மறைந்து கிடக்கிருர். அவரை எழுப்பவேண்டும்.

அவரை எழுப்பவே திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடப்பட்டிருக்கின்றன.

அறிவறிந்த ஆன்ருேர் பலரும் இம்முறையைப் பின் பற்றி ஆண்டவர் அருளைப் பெறவும், மக்கள் அகவிழிப்புற வும் திருப்பள்ளியெழுச்சியைத்தெய்வத்தை முன்னிலையாக வைத்துப் பாடிப் பரவினுர்கள்.

பிற்காலத்தில் வந்த பக்திப் புலவர்களும், துதிப்பாட கர்களும், தெய்வத்தையும், மக்களையும்கூட முன் நிலைப் படுத்தித் திருப்பள்ளியெழுச்சி பாடினுர்கள்.

அசுர வேகத்தோடு கூடிய வீராவேசத்தைத் தட்டி எழுப்பும் புரட்சிக் கவிஞர்கள் கூட திருப்பள்ளி எழுச்சி பாடினுர்கள்.

இவர்களின் திருப்பள்ளி எழுச்சிப் பாடலும் மக்களிடையே ஒருவகை எழுச்சியை உண்டாக்கி இருக்கிறது. புரட்சிக் கனலையே உலகத்தில் பரவச் செய்திருக்கிறது.

அக விழிப்பை ஏற்படுத்தி அருட்ஜோதிக் கனலைப் பரப் பும் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களே மக்களுக்குப் பெரு நலம் தரக்கூடியது.

இந்த அக எழுச்சியைத்தான் மாணிக்கவாசகரும், திருஅருட்பிரகாசரும் வழங்கினர்கள். மற்றவர்களுடைய திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களும் ஏற்கக் கூடியவைதான். எப்படி இருந்தால்? அக விழிப்பை உண்டு பண்ணி அருள் அனுபவத்தைக் கூட்டிவைக்கத் துணை புரிவதாக இருந்தால்.

மக்களுக்கு வேண்டியது என்ன?

சுத்த சுகானந்தப்பேறு.

இதற்கு வள்ளல் பெருமானின் சுத்த சிவ சன்மார்க்கத் திருப்பள்ளி எழுச்சி முறையே மிகவும் பொருத்தமானது.

# மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சி

வெளியே நாம் காண்பது பூத ஆகாயம். நம் சிரநடுவில் இருப்பது பரம ஆகாயம்.

இங்குள்ள திருச்சிற்றம்பலத்தின் அருள் அகநிலை அனுபவத்தை மாணிக்கவாசகர் சொல்கிறார்.

இந்த அருள் வாசகமே திருவாசகம். திருவாசகத்தின் பொருள் ஒவ்வொருவரும் அவரவர் பெறுகின்ற அருள் அகஅனுபவத்துக்கு ஏற்ப விளங்குகிறது.

அருள் அகவிழிப்பை உண்டுபண்ணுவதுதான் மாணிக்க வாசகரின் திருப்பள்ளியெழுச்சி.

மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சிப் பதிகத்தின் பொருளை விளங்கிக் கொள்வதற்கு வள்ளல் பெருமானின் அருள் அக அனுபவம் உதவி செய்கிறது. அதுதான் சுத்த சன்மார்க்க ஜோதி.

இந்த ஜோதியின் உதயத்தில் திருவாசகத் திருப்பள்ளி எழுச்சியின் கற்பனை வளத்துக்குள் சிக்குண்டிருக்கும் இறை வனைக் காணமுடிகிறது.

திருப்பள்ளியெழுச்சி பாடிய இடம் திருப்பெருந்துறை. இது தஞ்சை மாவட்டத்தில் இருக்கிறது. இப்போது அதன் பெயர் ஆவுடையார் கோயில்.

இங்குதான், ஆளுடைய அடிகளான திருவாதவூரர், குருந்த மரத்தடியில் குருவாகத் தோன்றிய இறைவனால்

ஆட்கொள்ளப்பட்டார். இது புற உலகத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி. அருட்பெரும் கடவுள் தான் ஒவ்வொருவர் உள்ளே இருந்து ஒவ்வொன்றையும் உலகில் நடத்தி வருகிறுர்.

எனவே எந்த ஒரு முக்கிய நிகழ்ச்சிக்கும் உள்ளே இருக்கும் இறைவனின் அருள் தொடர்பு நிச்சயமாக உண்டு. அருட் பெரியோர்கள் மூலமாக வெளியாகும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் காரணம் அவர்கள் உள்ளே இருந்து செயல் படும் இறைவனின் திருஅருளே.

அருளாளர்களால் குறிக்கப்பட்ட எந்தவொரு நிகழ்ச்சியும் வெளி உலகிலும் நிகழ்ந்திருக்கலாம். அவர்கள் உள்ளமாகிய அகவுலகிலும் நிகழ்ந்திருக்கலாம். எதற்கும் அடிப்படை இறைவனின் திருஅருளே.

திருப்பெருந்துறையும், அந்த குருந்த மரத்தடியில் குருவாக வந்த இறைவனிடம் தீட்சை பெற்ற திருவாதவூரரும், அவர் பாடிய திருப்பள்ளியெழுச்சியும் அருள் அக அனுபவத்துக்கு ஆக்கம் தருபவை.

இந்த அருள் அக அனுபவத்தையே "நாடும் பெருந் துறை நான் கண்டு கொண்ட பின் கூடும் சிவனது கொய் மலர் சேவடி" எனக் குறிப்பிடுகிறுர் சன்மார்க்கத்துக்கு வித்திட்ட ஞானியான திருமூலர்.

திருப்பெருந்துறை என்பது நம் சிரநடுவில் இருக்கும் கடவுட் ஜோதி நிலையம். இதைப் பிரமரந்திரப்பெரு வெளி என்று ஞானயோகிகள் சொல்வார்கள்.

இங்குள்ள ஆன்மபீடத்தில் உருவத்துடன் கூடிய பூதலிங்கம் இல்லை. ஆன்ம நாதரே அருவமாக இருக்கிறுர். இந்த உண்மையைக் குறிக்கவே, ஆவுடையார் கோயிலில் லிங்கத்தின் பீடமான ஆவுடை மட்டுமே அமைத்திருக்கின்றனர். அதன் மீது லிங்கம் அமைக்கப்படவில்லை.

ஒவ்வொருவருடைய உயிருக்குள்ளும் உயிராக இருப்பவர் இறைவன். அவர் ஒவ்வொருவர் அகத்திலும் மறைந்து

இருக்கிருர். அவரையெழுப்பி அவர் துணையுடன் நாம் செயல் படவேண்டும். அதற்குப் புருவ மத்தியில் மனதை நிறுத்தித் தயவுடனும் ஒருமையுடனும் இறைவனுக்குத் திருப்பள்ளி யெழுச்சி பாடிப் பரவுதல் வேண்டும்.

திருப்பெருந்துறையில் பாடப்படும் திருப்பள்ளியெழுச்சி எல்லோருக்கும் அகவிழிப்பை உண்டுபண்ணும்; அருள் ஆற்றலை அடைந்திடச் செய்யும்.

மாணிக்கவாசகர் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சி என்ற பதிகத்தின் அடியில் ஒரு குறிப்பு இருக்கிறது. அது "திரோ தான சக்தி" என்பது.

மாயை என்னும் அறியாமையின் ஒரு கூருகிய மறைப் புச் சக்தியே திரோதான சக்தி. அறியாமையும், மறைப்புச் சக்தியும் ஒருவரிடம் பக்குவம் அடையாத நிலையில் இருப் பவை. அவர் பக்குவம் பெற்றபோது அவர் உள்ளே அருள் ஒளி உதயமாகும்; அகவிளக்கம் ஏற்படும். அப்போது அவரிடம் இருந்தஅறியாமையின் ஒரு கூருகிய மறைப்புச் சக்தியும் விலகிவிடும். அருட்ஜோதி தோன்றும். இதைத்தான் திருப்பள்ளி எழுச்சி சொல்கிறது.

திருப்பள்ளி எழுச்சி பத்துப் பாடல்களையுடையது. இதற் குப் பதிகம் என்று பெயர். 'பா'வும் 'பதிக'மும் இறைவனைப் பற்றிய உண்மையைக் காட்டுவன. இது தெய்வத்தமிழ் மாழியின் அமைப்பில் இருக்கும் ஒரு சிறப்பாகும்.

திருப்பள்ளி எழுச்சி பதிகத்தில் இருக்கும் பத்துப் பாடல் களிலும் இயற்கையில் நாம் காணும் அழகையும், அதனுல் ஏற்படும் செயல்களையும், பக்தர்கள், சித்தர்கள் ஆகியவர் களின் தன்மைகளையும், அவர்கள் அகஉணர்வுகளையும், அருள் அனுபவங்களையும் கண்டு அனுபவித்து மகிழலாம்.

திருப்பள்ளி எழுச்சி பாடல்களின் கற்பனை வளமும், கவியின் இனிமையும், கருத்தோவியங்களின் அழகும் நம்மை இன்பத்தில் ஆழ்த்துபவை.

மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களில் இருக்கும் அருள் அனுபவங்களையும், கவி இன்பத்தையும் சமயத்தீப ஒளியில் சமயச் செல்வர்கள் கண்டுகளிக்கிறார்கள்.

அருட்செல்வர்கள் சமயங்கடந்த நிலையில் இருந்து அருட் ஜோதி வெளியில் அந்தப் பாடல்களில் உள்ள எல்லாவற் றையும் உள்ளது உள்ளபடியே கண்டு ஒப்பற்ற இன்பம் அடைகிறார்கள்.

கடவுள் ஒருவரே. அவர் ஜோதி வடிவமானவர்; எல்லோ ருக்கும் உரியவர். ஆதலால் எந்த வேறுபாடும் இல்லாமல் சுத்தஅருள் கண்ணாடியின் வழியாக அருட்செல்வர்கள் இறை வனைக் கண்டு இன்புறு கிறார்கள்.

சுத்த சன்மார்க்க வழியில் மாணிக்கவாசகரின் திருப் பள்ளி எழுச்சிப் பாடல்களுக்கு விளக்கம் காண்போம்.

# 1

போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற்கு இணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத்து எமக்கு அருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்று இதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவ பெருமானே!
ஏற்றுயர் கொடியுடை யாய்எனை உடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே!

இந்தப் பாடல் கடவுளிடத்தில் இடைவிடாத பற்றுதலை உண்டாக்குகிறது. கடவுள் பண்பை மக்களிடம் எழுப்பி அதை நிலைபெறச் செய்கிறது.

கடவுள் பண்பு மக்களிடம் எழுந்து நிலைபெறச் செய்ய என்ன செய்வது?

முதலில் தக்க தலங்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அங்குச் சிற்ப அற்புதங்கள் நிறைந்த ஆலயங்களை எழுப்ப வேண்டும். இந்த ஆலயங்களில் எழுந்தருளி இருக்கும் இறைவனை முன்னிலைப்படுத்தி, திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களைப் பாடச் செய்யவேண்டும்.

இவ்வாறு மாணிக்கவாசகப் பெருமான் பாடி அருளியது தான் திருவாசகத்தில் இருக்கும் திருப்பள்ளி எழுச்சி. இந்தத் திருப்பள்ளி எழுச்சிப் பாடலைப் பாடி இறைவனை வழிபடுவதன் மூலமாக மக்கள் கடவுள் பண்பைப் பெறுகிறார்கள்.

கடவுள் பண்பைப பெற்ற மேன்மக்கள் அந்தத் தெய்வத்திருத்தலங்களுக்குச் சென்று அங்கு எழுந்தருளி இருக்கும் இறைவனைப் பக்தியோடு பணிந்து ஏத்தி வழிபட்டு வருகின்றனர். இதனுல் அவர்களுக்கு ஓர் குறிப்பிட்ட அளவு சக்தியும், சித்தியும், சித்த சுத்தியும் ஏற்படுகின்றன.

இது மட்டும் போதுமா? போதாது.

திருத்தலங்களில் எழுந்தருளி இருக்கும் இறைவனின் திருப்பள்ளி எழுச்சிப் பாடல் வழிபாட்டு முறையால் நம்உள் விளங்கும் உண்மையை உள்ளபடி முழுவதும் உணர்ந்து கொள்ளுவதற்கு முயலவேண்டும்.

திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களைப் பாடும்போது தயவு ஒழுக்கத்துடன் இருந்து மற்றவர்களும் பயன்பெறும் வகையில் பாடிப் பரவவேண்டும்.

இந்த நிலையில் இறைவன் தம் பெருங்கருணையால் தம்மைப்பற்றிய இயற்கை உண்மைகளைப் படிப்படியாக நமக்கு உணர்த்துவார்.

இறைவன் காட்டும் உண்மைகளை உணர்ந்து அதை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதுதான் திருப்பள்ளி எழுச்சிப் பாடலைப் பாடிப் பரவுவதின் குறிக்கோள்.

‘திருப்பெருந்துறையுறை சிவபெருமானே பள்ளி எழுந்து அருளாய்’ என்பது மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சிப் பதிகத்தில் இருக்கும் ஒவ்வொரு பாடலின் முடிவு.

சிவபெருமான், ரிஷபக்கொடி ஏந்தியுள்ளார். அவரது வாகனமும் ரிஷபமே ஆகும். ரிஷபம் தனக்கு வரக்கூடிய துன்பங்களை எல்லாம் மற்றவர் பெறும் இன்பத்தை எண்ணி பொறுத்துக்கொள்ளும் தயாகுணம் உடையது. இது, அன்பு உருவமான சிவனுடைய தன்மையும் உண்மையும் அருளே என்பதைச் சிறப்பாகக் காட்டுகிறது.

அருட்ஜோதிக் கடவுளான சிவன் விளங்கும் இடம் திருப்பெருந்துறை. அது நீர்வளமும் நிலவளமும் பொருந்தியது. வளம்பொருந்திய பெருந்துறை வயல்களில் செந்தாமரையும் மலர்ந்து குலுங்கும்.

திருப்பெருந்துறைக் காட்சிகள் நம் சிரநடுவில் இருக்கும் தகர ஆகாசத்தையும், அங்குள்ள தாமரை மலரையும், அவற்றின் கீழ் இருக்கிற சேறுபோன்ற தசைக்கோளங்களையும் குறிக்கின்றன.

இந்தப் பெருந்துறைக் கோயிலில்தான் சிவபெருமான் எழுந்தருளி இருக்கிறார். திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் சிவபெருமான் எழுந்தருளி அருள்பாலிக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றன.

"என் வாழ்க்கையின் அடிப்படையாக இருக்கிற பெரும் பொருளே! நின் திருவடித் தாமரையைத் தொழுது நிற்கிறேன். பொழுது புலரும் வேளை; இருள் கலைந்து ஒளி பரவும் வேளை; பிரணவநாத ஒலி ஆகிய வீரக்கழல் ஒலிக்கும் நின் பொற்பாதத் துணை விளங்கும்படி இங்கு எழுந்தருளி வேண்டும். நின் புன்முறுவல் பூத்த திருமுருக தரிசனம் வழங்கி எனக்குக் கருணை புரியவேண்டும்." இவ்வாறு மாணிக்கவாசகர் வேண்டிக்கொள்கிறார்.

சிவபெருமான் எருதுக்கொடியைக் கொண்டதன் நோக்கம் என்ன? தம் திருவருளை அவர் வழங்குகிற அடையாளம் தான். "அந்தக் கொடியை உயர்த்தி என்னையும் ஆட்கொண்டிருக்கிறாய். ஆதலின் உன்னைக்காண நான் திருப்பள்ளி எழுச்சி பாடுகிறேன்" என்கிறார் மாணிக்கவாசகர்.

கடவுள் ஒவ்வொருவர் உள்ளேயும் மறைந்து இருக்கிறார். ஒவ்வொருவரையும் ஆள்கிறார். உலகம் எல்லாவற்றையும் ஆண்டு அருள் புரிகிறார்.

ஒவ்வொருவரும் அருள் அனுபவம் பெறுகிற வரையில் அவரவர் உள்ளே இருக்கும் திருப்பெருந்துறையில் இறைவன் பள்ளிகொண்டுதான் இருக்கிறார்.

எந்தச் சமயத்தில் அருள்ஒளி அகத்தில் இருந்து எழுந்து அவர் உடம்பினுள் நிறைந்து கலந்துகொள்ளுகிறதோ, அப்போதுதான் அருட்பெரும் கடவுள் அவர்முன் எழுந்தருளி அவருக்குப் பூரண கருணை பாலிக்கிறார்.

அதுவரையில் திருப்பள்ளி எழுச்சிப் பாடிப் பரவுதல் முறையாகும்.

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் புருவ நடுவில் இருந்து தம் உள்ளே இருக்கும் திருப்பெரும்துறையாகிய அருட்பெருந்துறையில் இருக்கும் இறைவனை திருப்பள்ளியில் இருந்து எழுந்து அருளும்படித் துதி செய்தல் வேண்டும்.

அவருக்கு வெளி உலகக் காட்சிகளும், அவர் உள்ளே தோன்றும் சூக்கும வடிவக் காட்சிகளும் ஒருவர் மனம் அருளொளி பெற்று,புலன் அடங்கும் வரையில் அவரை மயக்கிக்கொண்டேதான் இருக்கும்.

உள்ளே அருள் ஒளி தோன்றிய பிறகு கற்பனைக் காட்சிகளுக்கு அங்கு இடம் இல்லை. அப்போது சுத்த அருட் ஜோதியே அகமும் புறமும் சூழ்ந்து விளங்கும்.

இந்த நிலையை அடைவதுதான் திருப்பள்ளி எழுச்சியின் குறிக்கோள்.

ஆகையால் பாடலின் சொல்லிலும் பொருளிலும் சொற்பொருள் விளக்கத்திலும் ஈடுபட்டு ஆராய்ந்துகொண்டு இருந்துவிடக்கூடாது. அகத்தில் அருள் ஒளியை எழுப்பிக் கொண்டு ஆனந்தம் அடையவே முயலவேண்டும்.

# 2

அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலர மற்று அண்ணலம் கண்ணும்
திரள்நிரை அறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே!
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே!
அலைகட லே!பள்ளி யெழுந்தரு ளாயே!

இந்திரன் திசை கிழக்கு. சூரிய உதயத்திற்கு முன் கீழ் வானத்தில் செம்மை படர்ந்த ஒளி பரவுகிறது. இதுவே அருணோதயம். இவ்வொளி பரவப்பரவ இருள் தேய்ந்து தேய்ந்து அருகிப் போகிறது. இந்த வேளையில் திருப்பள்ளி யெழுச்சி பாடப்படுகிறது.

"அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே! அலைகடலே!" என்று மாணிக்க வாசகர் இறைவனை அழைத்துப் போற்று கிறார். சிவன் அருள், உயர்ந்த மலையினும் உயர்ந்தது, ஆழ்ந்த கடலினும் ஆழ்ந்தது. ஆதலின், எந்த மலையில் இருந்தும் கடலில் இருந்தும் கிடைத்தற்கு அரிய அருட் பெரும் பொருள் இறைவனிடம் இருந்து கிடைக்கும்.

இந்த இறைவனைத்தான் நம் திருப்பெருந்துறையில், அதாவது சிரநடுவில் பள்ளி எழ வேண்டுகிறோம். அவர்

நம் சிரநடுவில் தம் பள்ளி கலைந்து எழுந்தருளும் போது காண்பதற்கு அரிய பேரின்பக் காட்சிகளை எல்லாம் காணு கிறோம். அடைவதற்கு அரிய பேரின்ப அனுபவத்தை எல்லாம் அடைகிறோம்.

திருப்பெருத்துறையுள் எழுந்தருளும் சிவபெருமானின் திருமுகம் ஒரு தெய்வத்தாமரை மலர்போல் திகழ்கிறது. அதிலிருந்து கருணைச் சோதி ஆகிய சூரியன் உதயமாகிறது. அதுமேல் எழஎழ அத்தெய்வத் திருமுகத்தின் கண்ணைக் காக்கும் இமைகள் சிறிது சிறிதாக விரிந்து மலர்கின்றன.

அவற்றின் உள்ளிருக்கும் கண்மணிகள் பளீர் என்று தோன்றுகின்றன. அந்தக் கரிய கண்மணிகளைத் தம் முடைய இனம் என்று எண்ணிய கருவண்டுகள் வரிசை வரிசையாகச் சென்று அவற்றைச் சூழ்ந்துகொள்கின்றன.

கருவண்டுகள் எழுப்பும் ரீங்கார நாதம் இன்னிசை யாகப் பொங்கிப் பரவுகிறது. இந்தக் காலைக் காட்சியைத் தான் மாணிக்கவாசகப் பெருமான் "திரள் நிரை அறுபதம் முரல்வன" என்று வியந்து கூறுகிறார்.

வண்டுக்கு 'அளி' என்று ஒரு பெயர் உண்டு. அளி என்ற சொல் அன்பையும் குறிக்கும். அன்பர்களே கருவண்டு கள், அன்பு ஒளியே சிவனுடைய கருவிழிகள். சிவபெரு மானின் அன்பர்கள் அவர் அன்பு விழிகளின் கடாட்சத்தைப் பெறுகிறார்கள். அதனால் அவர்கள் சிவபெருமானுடைய கரு விழிகளின் நிறமாகவும் அவைகளின் இனமாகவும் ஆகிவிடு கிறார்கள்.

இதற்குச் சமயப் பொருளும், சுத்த சன்மார்க்கப் பொரு ளும் உண்டு.

சமயப் பொருள் என்ன?

சிவபெருமானின் கண்களை ருத்திராட்சம் என்று சைவ சமயம் வர்ணிக்கிறது. இதனால்தான் சைவ சமயத்தினர் ருத்திராட்சம் அணிகின்றனர். ருத்திரன் என்றால் சிவன்.

அட்சம் என்ருல் கண். ருத்திராட்சம் என்ருல் சிவனுடைய கண். நன்ருக விளைந்து முதிர்ந்த ருத்திராட்சத்தை அணிந்து கொள்வதால் மருத்துவ முறைப்படி ஓரளவு உடல் நலம் பெற லாம். இதைத்தவிர வேறு தனியான அருள் சிறப்பு ஒன்றும் அதற்கு இல்லை.

சுத்த சன்மார்க்கப் பொருள் என்ன?

சமயங்கடந்தவர்கள் தான் அருளாளர்கள். இந்த அருளா ளர்களும் இவர்கள் அன்பர்களும் அணிந்துகொள்வதோ ருத்ராட்சம் அல்ல; சுத்த அன்பு. அன்பு நிறைந்த பார்வை யும், தயாவண்ண நோக்கமும், கருணை நிறைந்த செயல் களும் எல்லோரும் அணிந்துகொள்ளக்கூடிய சிறந்த அணி கலன்களாகும்.

சுத்த சன்மார்க்க அன்பர்கள் திருப்பெருந்துறையில் இருக்கும் இறை ஒளியின் முன் நின்று திருப்பள்ளியெழுச்சி பாடிக்கொண்டிருக்கிருர்கள். நாமும், நம் சிரநடுவில் இருக் கும் திருப்பெருந்துறையில் மனத்தை நிறுத்தி அன்பென்னும் கருவண்டாக மாறி, சத்விசாரத்துடன் அருட்கீதத்தை முரன்று கொண்டிருப்போம்.

அருட்பெரும் ஜோதி ஆண்டவர் நம் உள் எழுவார்; நிறை அருள் தருவார். இந்த அருள் நிதியைப் பெறுவது தான் பேரின்ப நிலை.

இதைத்தான் ''அருள்நிதி தரும் ஆனந்த மலை'' என் றும், ''இன்ப வாரிதி'' என்றும் மாணிக்கவாசகர் மனம் உருகிப் பாடுகிருர்.

# 3

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநல் செறிகழல்த் தாள்இணை காட்டாய்!
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே!
யாவரும் அறிவு அரியாய் எமக்கு எளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

இந்தப் பாடலின் முதல் அடியில் விடியற் காலையின் வியத்தகு நிகழ்ச்சிகளையும், இயற்கையின் இனிய எழில் காட்சிகளையும் மிக அழகாக வர்ணிக்கிறார் மாணிக்கவாசகர்.

குக்கூ என்று பூங்குயில் கூவுகிறது; கொக்கறக்கோ என்று தெருக்கோழிகள் கூப்பிடுகின்றன; விதம் விதமான புள்ளினங்கள் பலவகை இனிய ஒலிகளை எழுப்புகின்றன; சங்குகள் மங்கலமாக முழங்குகின்றன.

கிழக்கு வெளுக்கிறது. அருணோதயம் ஆகிறது, அதன் ஜோதியில் நட்சத்திரங்களின் ஒளி மங்கி ஒளிர்கின்றன.

இந்த நிகழ்ச்சிகளும் தோற்றங்களும் எதை உணர்த்து கின்றன?

உலகத்துக்கு இன்பம் தரும் சூரியனின் உதயத்தை உணர்த்துகின்றன.

நம் அகவுலகில் அருட்ஜோதி உதயத்தை உணர்த்துவதற்கு இவ்வளவும் அறிவு விளக்க நிகழ்ச்சிகளாக ஏற்படுகின்றன. இந்த விளக்க உணர்வோடுதான் ஆண்டவரைப் பள்ளி எழ வேண்டுகிறோம்.

இதுவரையில் மனம், விருப்பு வெறுப்புகளால் இவ்உலகில் உழன்று கொண்டிருந்தது. இப்பொழுது அதற்கு ஒரு தெளிவு ஏற்பட்டிருக்கிறது. இவ்உலக வாழ்வில் பட்ட இன்ப துன்பங்கள் மனதுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. அதிலிருந்து மீண்டும், இறைவன் திருவடியைப் பெறவேண்டும் என்ற எண்ணமும், ஒருமையும் அதற்கு ஏற்பட்டிருக்கிறது.

அருட்பெருஞ் ஜோதியே! இப்பொழுதே எம்மை ஆட்கொள்வதற்கு எழுந்தருள வேண்டும். தேவதேவா! பேரின்ப வெற்றி கொடுக்கக்கூடிய தங்கள் திருவடிகளை எம் சிரத்தின்மீது சூட்ட வேண்டும். எம் சிரநடுவில் உள்ள திருப்பெருந்துறையில் எழுந்தருளி இருக்கும் அருட்ஜோதி சிவமே! அங்கிருந்து எழுந்து எம்மை ஆண்டருள் புரிய வேண்டும்.

சுத்த அருள் மயமாய், விளங்கிக்கொண்டிருப்பவர் சிவ பெருமான். அவரை கை கால் முதலிய செயற்பொறிகளாலும், கண் காது முதலிய அறிவுப்பொறிகளாலும், மனம் முதலிய கரணங்களாலும் அறிந்து அனுபவிக்க முடியாது. ஆனால் அருள் அனுபவம் பெற்ற பிறகு அவரை அறிந்து அனுபவிக்கலாம்.

தேவர்களும், மூவர்களும், முத்தர்களும், சித்தர்களும் நம்மைப் போன்ற தனித்தனி ஆன்மாக்கள்தான். அவர்களில் யாரும் தனித்தலைமைப் பெரும்பதி அல்லர். அவர்கள்கூட அருள் அனுபவம் பெற்று தங்கள் ஆணவம் முற்றும் நீங்கிய பிறகுதான் இறைவனைக் காண முடியும்.

அருட்பெரும் பதியே தம் சுத்த அருள் ஒளியால் எல்லாமாகி இருக்கிறார். அவரே தம் அருளால், தம்மை வெளிப்

டடுத்திச் சேர்கிருர். அருள் அனுபவம் பெருத மற்றவ களால் அவர் அறியப்படுபவராக இல்லை. அப்படி இருக்கும் அருட்பெரும் பதியை ''நான் எளிதாகப் புரிந்துகொள்ளும் படிச் செய்திருக்கிருர்'' என்று சொல்கிருர் மாணிக்கவாசகர்.

அவருக்கு மட்டும் இறைவன் எப்படி எளிதாகக் கிடைக்கக் பெற்றிருக்கிருர்? அந்தப் பதியின் அருளே அவருக்கு அருள் அறிவைக் கொடுத்தது' அந்த அருள் அறிவின் துணை கொண்டே அவர், தம்மை அறிந்துகொள்ளும்படியும் செய்தது. அந்தப் பதியின் அருளாலே இறைவனே, மாணிக்க வாசகரின் உடலாய், உயிராய், உணர்வாய், அறிவாய் இருப்பதை மாணிக்கவாசகர் விளங்கிக்கொள்ளும்படியும் செய்தது.

ஆகையால், நான் என்பதற்கு இறைவன் என்பதைத் தவிர வேறு பொருளைக் காண்பதற்கில்லை. இறைவன் அருளே, மாணிக்கவாசகர் இறைவனைக் காணும்படிச் செய் திருக்கிறது, இந்த இறை அருள் அனுபவமே, மாணிக்க வாசகர் அனுபவமாகவும் இருக்கிறது.

இறை அருள் அனுபவம் பெருதவர்களால் இறைவனைக் கண்டு அனுபவிக்க முடியாது. அப்படிப்பட்ட இறைவன் தமக்கு மட்டும் மிக எளியவராக இருக்கிருர் என்கிருர் மாணிக்கவாசகர்.

தாம் பெற்ற இந்த அருள் அனுபவத்தைத்தான் மாணிக்கவாசகர் ''யாவரும் அறிவரியாய், எமக்கு எளி யாய்'' என்று அனுபவித்துப் பாடுகிருர்.

மனித உருவம் ஓங்கார வடிவத்தின் நிறைவை உடையது. இதனுல்தான் மனித தேகங்களில் பக்குவ ஆன்மாக் கள் வாழ்கின்றன. அவைகள்தான் இறைவனுடைய அருளைப் பெற்று அவரைக் கண்டுகொள்கின்றன. இதுதான் உண்மை. இதற்கு மாருக வேறு யாராலும், எக்காலத்தும், எவ்விடத்தும் இறைவனைக் கண்டு அனுபவிக்க முடியாது.

ஆகையால்தான் தேவர்களும் தங்கள் பிறவியைவிட மனிதப் பிறவி உயர்ந்தது என்று உணருகிருர்கள். தங்கள் தேவலோக சுகபோக வாழ்வைத் துறந்துவிட்டு மண்ணுலகில் மனிதராக வந்து பிறக்க விரும்புகிருர்கள்.

தேவர்கள் தாங்கள் வகித்துவரும் பதவியில் மோகம் கொண்டு தாங்கள் அடையவேண்டிய உண்மை நிலையை மறந்துவிடுகிருர்கள்.

இந்திரபோகம் கிடைத்த அமரர்கள்கூட, நெடுங்காலம் வாழ்ந்தாலும் அதில் அல்லலும் அவத்தையும் பட்டு அழிந்து போகிருர்கள்.

இப்படி அழியாமல் இருப்பதற்காகத்தான் அவர்கள் மண்ணுலகில் பிறக்கிருர்கள். மண்ணுலகில் மனித வடிவில் தான் இறைவனின் அருளைப்பெற முடியும்.

இந்தக் கருத்தை இப்பதிகத்தின் இறுதிப் பாடலிலும் மாணிக்கவாசகர் சிறப்பாகச் சுட்டிக் காட்டுகிருர்.

# 4

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
　　இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
　　தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
　　திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!
என்னையும் ஆண்டுகொண்டு இன் அருள் புரியும்
　　எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே!

திருப்பெருந்துறை இறைவனின் சந்நிதி. இறைவனுக்கு உதய கால பூஜை ஆரம்பமாகிறது. பக்தர்கள் பலர் குழுமி இருக்கிறார்கள். உருக்கமாக தெய்வ வழிபாடு செய்கிறார்கள்.

இந்த அற்புதக் காட்சியை ஓர் அழகிய சொல்லோவிய மாக இந்தப் பாடலில் காட்டுகிறார் மாணிக்கவாசகர்.

வீணையிலிருந்தும், யாழிலிருந்தும் இன்னிசை எழுகிறது. அது செவிகளின் வழியாக உள்ளே சென்று, மனதைப் பரவசப்படுத்துகிறது.

இசைக் கலைஞர்கள் ஒரு பக்கம் இன்னிசை எழுப்பு கிறார்கள். மற்றொரு பக்கம் வேத கீதம் இசைத்துத் துதிக் கிறார்கள். இன்னொரு பக்கம் நறுமலர் மாலைகளைத் தம் கை களில் ஏந்திக்கொண்டு நிற்கிறார்கள்,

பிறிதொரு பக்கம் உள்ளமுருகி இறைவன் புகழ் பாடு கிருர்கள். கண்ணீர் பெருகக் கசிந்து உருகுகிருர்கள். பேரின்பத்தில் மூழ்கி உடம்பு துவண்டு நிற்கிருர்கள். வேருெரு பக்கம், தங்களை மறந்து சிவசிவ எனக் கூறிக் கொண்டு தங்கள் சிரங்களின் மீது கரங்கள் குவிய நிற்கிருர் கள்.

இந்தப் பக்தர் கூட்டத்தில் மாணிக்கவாசகரும் இருக் கிருர். 'திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! என்னை யும் ஆண்டுகொண்டு இன்அருள் புரியும் எம்பெருமானே! பள்ளி எழுந்தருள்வாயாக!'' என்று வேண்டிக்கொண்டு நிற்கிருர்.

இது திருப்பெருந்துறை ஆன்மநாதர் சந்நிதியில் மாணிக்கவாசகர் கண்ட அற்புதக் காட்சி; மெய் அடியார் களின் காலை வழிபாட்டுக் காட்சி. அவர்களுடன் மாணிக்க வாசகர் வழிபட்டது போலவே நாமும் ஆன்மநாதரை வழி படுவோம். அருள் ஞானத்தில் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை இதுதான்.

கற்பனையையும், பாவனையையும் கடந்து உண்மை நிலைக்கு வருவோம். அமைதியான சூழ்நிலையில் அமர் வோம். அருளில் பற்றுக்கொள்வோம். லலாட பீடமான புருவநடுவிருந்து, சிரநடுவில் வீற்றிருக்கும் அருட்பெருஞ் ஜோதியைத் திருப்பள்ளி எழவேண்டிக்கொள்வோம். நமது வேண்டுகோள் நிறைவேற்றப்படும்.

# 5

பூதங்கள் தோறும்நின் ருய்எனின் அல்லால்
போக்கு இலன் வரவுஇலன் என நினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டுஅறி யோம்உனைக் கண்டுஅறி வாரைச்
சீதம்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னு!
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்துஎம்மை ஆண்டுஅருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே!

பரம்பொருள் போக்குவரவு அற்றவர். எங்கும் நீக்கமற நிறைந்து இருப்பவர். அவருடைய குறைவற்ற பரிபூர்ண நிலையைப்பற்றி இப்பாடல் பேசுகிறது.

இந்த ஞாலம் முழுவதும் ஐம்பூத அணுக்களின் சேர்க்கையால் ஆனதுதான். ஒவ்வொரு அணுவிலும் ஆண்டவர் பூர்ணமாக நிரம்பியிருக்கிருர். அதனுல் ஆண்டவரை பூர்ண வியாபகி என்றும் எங்கும் உள்ளவர் என்றும் சொல்கிருேம்.

எங்கும் நிறைந்துள்ள ஆண்டவரை வெளியில் மட்டும் காணவோ, மற்றவர்களுக்குக் காட்டவோ முடியாது. உள்ளும் புறமும் ஒத்து நின்று இறைவனை அனுபவிப்பதன் மூலமாகத்தான் அவரைக் காணமுடியும். கண்டு அனுபவிக்கவும் முடியும்; மற்றவர்களுக்குக் காட்டவும் முடியும்,

வெளியிலேயும் இறைவனைக் காணவும் முடியும். காட்டவும் முடியும் என்று புலமைபெற்ற பக்தர்கள், உள்ளம் உருகிப் பாடுகிறார்கள்; ஆடுகிறார்கள். அவர்கள் அப்படிப் பாடுவதற்குக் காரணம் ஆன்றோர்களின் அருள் வாக்கில் அவர்களுக்கு இருக்கும் அசைக்கமுடியாத நம்பிக்கையே ஆகும்.

அருளாளர் ஒருவர், திருவருள் ஞானத்தாலே கடவுள் விளக்கத்தை முதலில் உணர்ந்து வெளியிட்டார். புலன் நெறியாளர் அதாவது அருள் அறிவு பெறாத புலவர்கள் பின்னர் அவ்வுண்மையை நேரடியாகத் தாம் அனுபவிக்காமலேயே அருளாளர்களின் விளக்கத்தை வைத்துக்கொண்டு கற்பனை வளத்துடன் அற்புதமாகப் பாடி வைத்துவிட்டார்கள்.

இவர்களுக்குப் பின்னால் வந்த பக்தர்கள் அந்தப் புலவர்கள் பாடிய பாட்டையே முதலாக வைத்துக்கொண்டார்கள். அதையே பலவாறு புனைந்தும் வனைந்தும் சொல்லத் தொடங்கிவிட்டார்கள்.

இறைவன் எண்குணத்தான் என்பர். அருள் அறிவு பெற்றவர்களைத் தவிர மற்றவர்களால் எண்ணுதற்கும் அரியவன் இறைவன். அப்படிப்பட்ட இறைவனை இந்த ஞாலத்தின் பூத அணுக்களில் எப்படிக் காண முடியும்? பகுத்தறிவாலும் இறைவனைக் காண முடிவதில்லை; விஞ்ஞானத்தின் துணையாலும் அவனைக் காண முடிவதில்லை. இறைவனின் அருளால் அதாவது அவருடைய பெருந்தயவினால்தான் அவரை ஒருவர் அறிந்து கொள்ள முடிகிறது.

ஆகையால் இறைவன் அருளைப் பெறுவதற்கு மன ஒருமையோடும் தயவோடும் இருந்து இறைவனை வேண்டிக் கொள்வோம்.

''*சீதங்கொள் வயல் திருப்பெருந்துறை மன்னா!* தயவு நிரம்பிய மனத்தையுடையவர்கள் மெய் அன்பர்கள். அவர்கள் கனிவுடன் காண்கின்ற மெய்யறிவுத் தலம் திருப்பெருந்

துறை. அதில் நிலைபெற்றிருக்கும் பரம்பொருளே! நீ எங்கள் சிந்தனைக்கும் எட்டாதவனாய் இருக்கிறாய். மறைந்திருக்கிறாய். என் செய்வோம்!

"நீயே திருப்பெருந்துறையிலிருந்து பள்ளி எழுந்து, எங்கள் முன் வந்தருள்வாய், எங்களுடைய குற்றங்களையெல்லாம் களைந்தெறிவாய். எங்களை ஆட்கொண்டு, அருள் புரிவாய் என்று பிரார்த்தித்துக் கொள்வோம்.

இறைவன் நமது பிரார்த்தனைக்கு இரங்குவார். நமது சிர நடுவில் இருக்கும் திருப்பெருந்துறையில் இருந்து எழுந்தருளுவார். அப்போதுதான் அவரை உண்மையாகக் கண்டு கொள்ள முடியும். அவர் இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு அணுவிலும் நிரம்பித் திகழுபவர். போக்கு வரவு அற்றவர். பரிபூர்ண நிலையில் உள்ளவர் என்பதை அனுபவ பூர்வமாகக் கண்டு கொள்ளவும் முடியும்.

இந்தக் காட்சியைக் கண்டு களிக்கும் சுத்த சன்மார்க்கக் காலம் உதயமாகி விட்டது. இனி உலகெலாம் இறை உண்மையைக் கண்டு கொள்ளும்.

# 6

6. பப்புஅற வீடுஇருந்து உணரும்நின் அடியார்
பந்தனை வந்துஅறுத் தார்அவர் பலரும்
மைப்புஉறு கண்ணியர் மானுடத்து இயல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா!
செப்புஉறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!
இப்பிறப்பு அறுத்துஎமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து தம்மை ஆட்கொள்ளவேண்டும். தம் பிறவிப் பிணியை ஒழித்திடல் வேண்டும் என்று இந்தப் பாடலில் இறைவனை வேண்டுகிறார் வாதவூரர்.

பலகாலமாக பல்வேறு பிறவிகளில் பிறந்து பிறந்து பலவேறு இன்ப துன்பங்களில் உழன்று உழன்று துன்பம் அடைந்த மாணிக்கவாசகர் உள்ளம் அவைகளில் இருந்து விடுதலை பெற விரும்புகிறது.

அவருக்கு விடுதலை கொடுக்க வல்லவர் திருப்பெருந்துறையில் இருக்கும் செம்பொருள் ஆகிய சிவபெருமான் தான்.

மாணிக்கவாசகர் போன்ற மெய்யடியார்கள் பற்றுகளைக் களைந்தவர்கள்; பந்தங்களை ஒழித்தவர்கள். அவர்கள்

பப்புஅற வீடு என்னும் ஒரு குறிப்பிட்ட பரப்பளவைக் குறிக்க முடியாத பெருவெளியில் இருந்து இறைவன் உண்மையை அறிந்து கொண்டவர்கள்.

மெய்யடியார்கள் எல்லாம் தயவுத் தன்மை விளங்கும் பெண்களாகவே மாறி மைதீட்டிய கண்களுடன் தங்கள் தலைவனுகிய இறைவன் முன்னுல் வந்து நிற்கிருர்கள். மைப்புறு கண்: கருமை பொருந்திய மை தீட்டப்பட்ட பெண்களின் அழகிய கண்கள். கண்மை என்பது தயவு என்ற பொருளையும் குறிக்கும். தயவுத் தன்மையுடையவர்கள் பெண்கள்.

மெய்யடியார்கள் வணங்குகிற ஆண்டவரும் தயவே வடிவானவர். தியாகத்தையே செயலாகக் கொண்டவர். இதனுல் தியாகேசன் என்னும் திருநாமத்தையும் பெற்றுத் திகழ்பவர்.

சிவனடியார்கள் இறைவனின் தயவுச் சக்தியை உமை அம்மையாகக் கொண்டனர். இறைவனை உமையொரு பாகனுக்கி வணங்கினர்.

இந்த அருட்பெருமானை மாணிக்கவாசகர் திருப்பெருந் துறைத் தலத்தில் வைத்துப் போற்றுகிருர்.

திருப்பெருந்துறையை "செப்புறு கமலங்கள் மலரும் தண்வயல்சூழ் திருப்பெருந்துறை" என்று வர்ணிக்கிருர். திருப்பெருந்துறை வயல்களால் சூழப்பட்டு இருக்கிறது. அந்த வயல்கள் நீர்வளம் உடையவை. அவைகளில் தாமரை மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அந்தத் தாமரை மலர்கள் போற்றுதற்கு உரியவையாக இருக்கின்றன.

திருப்பெருந்துறையில் இறைவன் திருமுன்னுல் நிற்கும் மெய்யடியார்களின் மனங்கள் வயல்கள், அவர்கள் கண்கள் தாமரை மலர்கள். அந்தக் கண்களில் தயவு நிரம்பி இருப்பதால் அவைகள் பாராட்டுக்கு உரியவை ஆகின்றன.

இந்த அருமையான இயற்கை சூழலைக்கொண்ட திருப் பெருந்துறையில் இருக்கும் சிவபெருமானே! திருப்பள்ளியில்

இருந்து எழுந்து வந்து எமக்கு அருள் புரிவாய்! இந்தப் பிறப்பை அறுத்து எம்மை ஆண்டு அருள் புரிய வேண்டும் என்று வேண்டுகிருர் மாணிக்கவாசகர்.

மாணிக்கவாசகர் விரும்புகிறபடி பிறப்பொழிந்து சிவானந்த மயக்கத்தில் மூழ்கி அதிலேயே கரைந்து போவதால், வாழ்க்கையில் அடைந்து அனுபவிக்க வேண்டிய இறை அனுபவம் இல்லாமல் போய்விடும்.

அப்பர் முதலிய சிவன் அடியார்கள் பிறப்பு வேண்டும் என்று இறைவனை வேண்டுகிருர்கள். காரணம் இறைவன் திருவடியை மறவாமல் தொண்டு செய்வதற்காகவே தங்களுக்குப் பிறப்பு வேண்டும் என்கிருர்கள்.

பிறவிகள் தோறும் அவர்கள் விரும்புவதுபோல ஒருவன் இறைவன் திருவடியை மறவாமல் இருக்க முடியுமா? தொடர்ந்து தொண்டு செய்துகொண்டிருக்கத்தான் முடியுமா? இரண்டும் முடியாது.

இறப்பும் பிறப்பும் இருக்கும் வரையில் நினைப்பும் மறப்பும் இருந்து கொண்டுதான் இருக்கும். தொண்டு செய்வதில் ஏற்படும் தடைகளும் இருந்து கொண்டேதான் இருக்கும். இந்தத் தொல்லைகளில் இருந்து நீங்க வழியில்லை.

தயா அனுபவம் விளங்கக்கூடியது நம் உடல். இந்த உடலைத் துறந்து விட்டால் அது மீண்டும் தோன்ருத முத்தி கிடைக்கலாம். அல்லது மறு பிறவி எடுக்கலாம். இவ்விரண்டிஞலும் தொடர்ந்து ஒருவர் இறை அனுபவம் பெற்று விளங்க முடியுமா? முடியாது.

ஆகையால் தொடர்ந்து இறை அனுபவம் பெற்று விளங்க இந்த உடலே அருள் ஒளியாக மாறி அழியாது நின்று விளங்கவேண்டுல்.

எனவே இறைவனிடம் பிறவாமை வரம் வேண்டுவதும், மீண்டும் பிறவியை வேண்டுவதும் பயனற்றவைகளாகும்.

இந்தப் பிறவியிலேயே இறவாமை பெற்று சுத்த தேகத்துடன் என்றும் நிலைத்து இருக்க வேண்டும்.

ஆகையால் நாம் திருப்பெருந்துறை ஆண்டவரிடம், "இப்பொழுதே எழுந்தருளி எம் உடம்பு இறந்து போவதைத் தடுத்து நிறுத்தவேண்டும். இங்கேயே நிலைத்து வாழும்படி அருள்புரிய வேண்டும்" என்று வேண்டிக் கொள்வோம்.

இந்தப் பிறவியிலேயே நம் இறப்பை ஒழித்தால்தான் மேலே நமக்கு பிறப்பும் இறப்பும் ஏற்படாமல் இருக்கும்.

நமது சிரநடுவில் அருளோடு மலர்ந்து புகழ்பட விளங்குவதுதான் ஒப்பற்ற உண்மையான திருப்பெருந்துறை.

நம்முடைய அருள் வாழ்க்கையினால் இந்த அருட்பெருந்துறையில் இருக்கும் ஆண்டவர் நம்மை ஆட்கொள்கிறார். இறை மயமாக நம்மை ஆக்குகிறார்.

இதனால் தொல்லை உலகில் அல்லல்பட்டு அழிந்து போகும் அவல வாழ்வு முடிந்துவிடுகிறது. பிறப்பும் இறப்பும் இல்லாமல் போய்விடுகின்றன:

# 7

அதுபழச் சுவைஎன அமுதுஎன அறிதற்கு
அரிதுஎன எளிதுஎன அமரரும் அறியார்
இதுஅவன் திருஉரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண்டு இங்குஎழுந்து அருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கை உள்ளாய்திருப் பெருந்துறை மன்னு!
எதுஎமைப் பணிகொளும் ஆறுஅது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே!

தேன்கள் நிறைந்த மலர்கள் குலுங்கும் சோலைகளுடன் கூடியது உத்தர கோச மங்கை என்னும் ஊர். இந்த ஊரின் மன்னனான இறைவன் திருப்பெருந்துறையில் எழுந்தருளி இருக்கிருர். அவரிடம் வேண்டிக்கொள்கிருர்.

"ஆண்டவரே! திருப்பள்ளியில் இருந்து எழுந்து வருக! தங்கள் திருஉருவம் எது என்று எங்களுக்குக் காட்டி அருள்க! நாங்கள் இறை அனுபவம் பெறும் முறையையும் அறிவித்து அருள்க! இதற்கு நாங்கள் என்ன செய்யவேண்டும் என்று கட்டளை இட்டு அருள்க!" என்று வேண்டிக் கொள்கிருர் மாணிக்கவாசகர்.

உத்தரகோசம் என்ருல் என்ன?

கோசங்கள் ஐந்து வகைப்படும். அவை அன்ன மயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்பன. இந்த ஐந்து கோசங்களால் ஆனது நமது உடல்.

இந்த ஐந்து கோசங்களும் நமது உடலில் ஒன்றினுள் ஒன்ருக் மறைந்து இருக்கின்றன.

ஆனந்த மய கோசத்தில் உயிருக்குள் உயிராக இறைவன் இருக்கிருன். இன்பமே வடிவமான இறைவன் இருக்கும் இந்தப் பகுதிக்குத்தான் உத்தரகோசம் என்று பெயர். இந்த உத்தர கோசத்தில் இறைவன் எழுந்தருளுகின்ற இடம்தான் திருப்பெருந்துறை.

திருப்பெருந்துறையில் இருந்து இறைவன் இன்னும் எழுந்து வரவில்லை; அன்பர்கள் முன்னல் தோன்றவும் இல்லை. ஆனுலும் அன்பர்களுக்கும் இறைவனுக்கும் ஓரளவு அருள் தொடர்பு உண்டாகிறது. அன்பர்கள் செய்துவரும் பரோபகாரச் செயலாலும் சத்விசாரத்தாலும் அவர்களுக்கு அருள் தொடர்பு அவ்வப்போது ஏற்படுகிறது.

அருள் சுவை பழச்சுவை போன்ருே, அமுதச் சுவையைப் போன்ருே, தேவர்களைப் போன்ற பிறராலும் எளிதில் அறிந்துகொள்வதற்கு முடியாதது. ஆனல் அருள் தொடர்பு கொண்ட அன்பர்களால் அருள் சுவை இப்படிப்பட்டது, என்று எளிதாக அறிந்துகொள்ள முடிகிறது.

அருள் கண்களைப் பெற்ற அடியார்கள்தான் இறைவனைக் கண்டு களிக்கிருர்கள். தேவர்களும் அருள் கண்களைப் பெற்ருல் அன்றி இறைவனைக் காணவும் முடியாது; அவன் அனுபவத்தைப் பெறவும் முடியாது.

மனிதப் பிறவியைப் பெற்ற அன்பர்கள் பூரணமான அருள் அனுபவத்தைத் தொடர்ந்து பெறுகிறபோது இறை அனுபவத்தைப் பெறுகிருர்கள். இதனல் அவர்களுக்கு நித்திய வாழ்வு கிடைக்கிறது.

இயற்கை எழில் குலுங்க உத்தரகோச மங்கை இருக்கிறது. இது இறை அனுபவத்தைப் பெறும் சூழ்நிலையைக் காட்டுகிறது. இயற்கையை எழில் உடையதாகச் செய்து வரும் சக்தி எதுவோ அதுதான் இறை உண்மை. ‘‘மது

வளர் பொழில் திருஉத்திரகோச மங்கை'' என்று இயற்கையின் எழில் வடிவமான இறை உண்மையை விளக்கிக் காட்டுகிறார் மாணிக்கவாசகர்.

உத்தரகோச மங்கையைச் சூழ்ந்துள்ள சோலைகளில் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அந்த மலர்களில் இருந்து தேனீக்கள் தேன் எடுத்துப் போகின்றன. இதனால் அவைகள், தாம் இன்பம் பெறுவதுடன் தங்கள் இனங்களுக்கும் இன்பம் கொடுத்து வருகின்றன.

அதுபோல அருள் அனுபவம் பெற்றவர்கள் தாங்கள் இன்பம் அடைகிறார்கள். அத்துடன் தங்கள் அருள் அனுபவத்தின் மூலமாக உயிர்க்குலத்துக்குத் தொண்டாற்றும் பரோபகாரச் செயலில் ஈடுபடுகிறார்கள். அதனால் நிறைவான இறை இன்பத்தைப் பெறுகிறார்கள்.

# 8

முந்திய முதல்நடு இறுதியும் ஆனுய்
மூவரும் அறிகிலர் யாவர்மற்று அறிவார்
பந்தணே விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந்து அருளிய பரனே!
செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந்து ஆண்டாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தரு ளாயே!

இறைவன் முதலும் நடுவும் முடிவும் இல்லாதவர். அவர் நிலேபெற்று இருக்கும் அறிவே வடிவானவர். எனவே இறைவனே முதலும் முடிவும் இல்லாத அரும்பெரும் ஜோதி என்றே சொல்வார்கள்.

முதலும் முடிவும் இல்லாத பொருளாக இருக்கும் அவரே தம்முடைய அருள் ஆற்றலால் எல்லா பொருள்களாகவும், எல்லா உயிர்களாகவும், அவைகளின் இயக்கமாகவும், இருந்து இயங்கி விளங்கி வருகிருர்.

ஆனல் உயிர்களோ தோன்றுகின்றன; மறைகின்றன. உயிர்கள் தோன்றி மறையாமல் நிலேத்த இன்பத்துடன் வாழக்கூடிய அனுபவத்தையும் இன்புருவான இறைவனே உயிர்களுக்குத் தருகிருர். நிலேயான இன்ப அனுபவத்தைப் பெறுவதுதான் உயிர்களின் குறிக்கோளாகும்.

இறைவன் தன் அருளாலே உயிர்களின் வடிவமாய்த் தோன்றித் திகழ்கிருர். அவைகளின் முதலும், நடுவும், முடிவுமாக இருக்கிருர்.

இக் கருத்துக்களை இப்பாடலின் முதல் நான்கு சீர்களில் மிக ஆற்றலோடு சொல்கிருர் மாணிக்கவாசகர்.

அதில் ''முந்திய, முதல்'' என்ற சொற்கள், எப்போதும் இருப்பவன் இறைவன்; அவன் எல்லாவற்றுக்கும் தலைவன், தொடக்கமே இல்லாதவன் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. இது இறைவனின் முந்திய நிலை.

''நடு இறுதியும் ஆனுய்'' என்ற சொற்கள் உயிர்களுக்கு முதலும் நடுவும் முடிவுமாக அமைவது இறைவனின் அருள் ஆற்றல் என்பதைக் காட்டுகின்றன. இது இறைவனின் பிந்திய நிலை.

இறைவனின் இந்த இருவகை நிலை பற்றிய உண்மையை மும்மூர்த்திகளான பிரும்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர்களாலும் அறிய முடிவதில்லை என்ருல் மற்ற யாரால் அந்த உண்மையை அறிந்துகொள்ள முடியும்?

மும்மூர்த்திகளாலும் அறிந்துகொள்ள முடியாத அருள் ஆற்றல் பெற்ற இறைவன் நம் சிரநடுவில் இருக்கும் திருப்பெருந்துறையில் விளங்குகிருர்.

அவர் நமக்கு அன்பு உருவமும், அருள் உருவமும் கொடுத்து நிலையான இன்ப உருவத்தையும் தருகிருர்.

நம் சிரநடுவில் இறைவனுடைய திருவடி விளங்குகின்றன. அதனுல் நாம் அவருடைய அடியாராக ஆகிவிடுகிறேம். பிறவிதோறும், அவர் நம் சிரநடுவில் இருப்பதால் இந்த உடல் அவரது பழைய குடிலாகவே இருக்கிறது.

இந்தக் குடிலில் அவர் மட்டுமா இருக்கிருர்?

அவருடைய அருளாற்றலாகிய சக்தியுடனும் அல்லவா சேர்ந்து எழுந்தருளியிருக்கிருர்.

அந்தச் சக்தி பந்தை அணைக்கின்ற பத்து விரல்களை உடையது. இதை "பந்தணை விரலியும் நீயும்" என்றார் மாணிக்கவாசகர்.

பத்து என்ற எண் எட்டும் இரண்டும் சேர்ந்த பத்தாகிய உடலையும், உயிரையும் குறிப்பது.

பத்து என்ற எண்ணைத் தமிழில் 'ய' என்று குறிப்பர். 'ய' என்ற எழுத்து இறைவன் இருப்பிடமாகிய ஆன்ம சிற்றம்பலத்தைக் குறிப்பது.

சக்தியின் பத்து விரல்கள் என்பது இறைவன் அருள் ஆற்றலைக் காட்டுவது.

உடம்பு, உயிர் ஆகிய பத்தும், சக்தியின் அருள் ஆற்றலான பத்து விரல்களால் தீண்டப்படும்போது அவை நித்திய நிலையைப் பெற்றுவிட நேர்கிறது.

இப்படி நமக்கு இன்ப அனுபவம் தருவதற்காகவே இறைவன் தம் அருள் சக்தியுடன் சேர்ந்து நம்முள் எழுந்தருளியிருக்கிறார்.

உடலும் உயிரும் சேர்ந்ததுதான் நாம். எட்டும் இரண்டும் சேர்ந்து பத்தாக விளங்குவதுதான் நாம்.

நம்முள் இருக்கும் ஆன்மாவாகிய பத்தை, தம் அருள் வண்ணமான பத்து விரல்களாலும் தீண்டி ஆடித் திளைப்பது அருள் சக்தி. இந்தச் சக்தியுடன் கூடி நம்முள் எழுந்தருளியிருக்கிறார் இறைவன்.

இவ்வாறு நம்முள் எழுந்தருளியிருக்கும் இறைவன் என்ன செய்கிறார்? நமக்குத் தம்முடைய திருமேனியைக் காட்டுகிறார். அவர் திருமேனி செந்தழல் ஜோதி மயமாய் இருக்கிறது. தாம் எழுந்தருளியிருக்கும் திருச்சிற்றம்பலமாகிய திருக்கோயிலைக் காட்டுகிறார். அங்கிருக்கும் இறைவனுடன் ஒன்றி எல்லா உயிர்களுக்கும் நாம் தொண்டு புரிய வேண்டும். இரக்க உணர்வுடன் பரோபகாரத் தொண்டு புரியவேண்டும். இதன் மூலமாகத் தயுவே வடிவமான

அந்தணன் ஆகும் வழியை அடையலாம் என்பதையும் காட்டுகிருர். முடிவில் அருள் அமுதம் அளித்திடச் செய்து நம்மை ஆட்கொள்ளவும் செய்கிருர்.

இந்தக் காரியங்களையெல்லாம் செய்வதற்குத் தம் சிர நடுவில் இருக்கும் சிற்றம்பலத்திலிருந்து பள்ளி எழுந்து அருளும்படி இறைவனை வேண்டுகிருர் மாணிக்கவாசகர்.

ஆவுடையார் கோயிலில்தான் இறைவன் மாணிக்க வாசகர் முன் தோன்றி அவருக்குத் தீட்சை கொடுத்திருக் கிருர். தாம் இறைவனிடம் பெற்ற தீட்சையைத்தான் மாணிக்கவாசகர் இவ்வாறு அனுபவித்துப் பாடி இருக்கிருர்.

# 9

விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளே!உன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே!
வண்திருப் பெருந்துறை யாய்!வழி அடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே!
கடலமு தே!கரும் பே!விரும்பு அடியார்
எண்ணகத் தாய்!உல குக்குஉயிர் ஆனுய்!
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

வானுலகம் ஒளி மயமானது. அங்கு வசிப்பவர்கள் தேவர்கள். அவர்களுக்கு நம்மைப் போன்ற தூல உடம்பு கிடையாது. சூட்சம உடம்பைப் பெற்றவர்கள்.

இருள் மயமானது நரக உலகம். இருளின் துன்பமயமான வாழ்க்கையை உடையவர்கள் நரகர்கள்.

நாம் வாழும் உலகமோ ஒளியும் இருளும் கலந்தது; அருளும் மருளும் நிறைந்தது.

சூக்கும உலக வாசிகளான தேவர்களை நாம் எப்படிக் காண்பது? நம் சூட்சம உடலாகிய உள்ளுடம்பிலிருந்து தான் அவர்களைக் காண முடியும். மனிதன், யோக முயற்சி யால் சூட்சம உடலை இயக்கும் ஆற்றலைப் பெறுகிருன். அதன் மூலமாக அவன் தேவர்களைக் காணமுடியும்.

தேவர்களை இன்னெரு வழியாகவும் காணலாம். மனி தனின் தூல உடம்பும், சூட்சம உடம்பும் இறைவனின்

அருளால் அருள் மயமாக மாறும்போது அவன் தேவர்களையும் காணலாம்; இறைவனையும் காணலாம்.

மனிதன் அருள் உடலைப் பெற்று உய்வதற்கு அவன் தயா உணர்வுடன் பரோபகார வாழ்க்கையைச் சத்விசாரத்துடன் மேற்கொள்ளவேண்டும்.

தேவர்கள் ஒளிமயமான வான் உலகில் சூட்சம உடலுடன் வாழ்ந்தாலும் அவர்களால் இறைவனைக் கண்டு அனுபவிக்க முடியாது.

காரணம்: அவர்கள் போக வாழ்க்கையில் ஈடுபட்டு அகங்காரத்தின் திருஉருவங்களாக இருக்கிறார்கள்.

இறைவனே அருள் சிறப்பைப் பெற்றவர். (விழுப் பொருள் = அருள் சிறப்பை உடைய ஆண்டவர்) தேவர்கள் அருள் சிறப்பு இல்லாதவர்கள். ஆணவம் நிரம்பியவர்கள்.

மனிதர்களிடத்தில் இருக்கும் இறை அருள் பக்குவம் பெறாதபோது, அவர்கள் மருள் நிலையில் ஆணவத்துடன் நடமாடுகிறார்கள். மருள் நிலை நீங்கி ஆணவம் அழிவதற்கு மனிதர்கள் தயா உணர்வுடன் உயிர்களுக்குப் பரோபகாரப் பணி புரிந்து வரவேண்டும். இதற்காகத்தான் மனிதப் பிறவி நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. மனிதப் பிறவியின் குறிக்கோளே எல்லா உயிர்களுக்கும் தொண்டு செய்து வாழ்வதும் இறைவனைக் கண்டு அனுபவிப்பதும்தான்.

மனிதனாக நாம் பிறந்ததினால்தான் நம் சிரநடுவில் இருக்கும் திருப்பெருந்துறை என்கிற சிற்றம்பலத்தைப் பெறும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறோம்.

சிரநடுவில் சிற்றம்பலத்தில் இருக்கும் இறைவனை, மனிதன் அருள் கண்ணால் காணும் பேற்றைப் பெறுகிறான். அப்போது இறைவன் அவனுக்குத் தேனாய், அமுதாய், கரும்பாய் இனிக்கிறான்.

அடியார்கள் உள்ளத்தில் உணர்வு மயமாக இருப்பவன் இறைவன். உலக உயிர் அனைத்தையும் ஆளுகின்றவன் இறைவன். சிரநடு சிற்றம்பலத்தில் உறைகிறவன் இறைவன். அந்த இறைவனைத்தான் பள்ளி எழுந்தருளும்படி வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

# 10

புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றேம்அவமே, இந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறுஎன்று நோக்கித்
திருப்பெருந் துறைஉறை வாய்! திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்துஎமை ஆட்கொள்ள வல்லாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தரு ளாயே!

மகாவிஷ்ணுவும், பிரம்மதேவனும் பூமியில் வந்து பிறக்க வேண்டுமென்று பேராவலுடன் இருக்கிறார்கள். விரைவில் மண்ணுலகில் வந்து பிறந்து இறைவனின் அருளைப் பெறத் துடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

அந்தரத்தில் மகாவிஷ்ணும், பிரம்மதேவனும் இவ்வாறு ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இறைவனே தன் பெரும் கருணையுடன் நம் சிரநடுவில் இருக்கும் திருப்பெருந் துறையில் எழுந்தருளி இந்த உலகில் உள்ள மனிதர்களாகிய நம்மை ஆட்கொண்டு அருளும் வள்ளலாக இருக்கிறார்.

ஆரமுதாக, இன்ப வடிவமாக திருப்பெருந்துறையில் உறையும் இறைவனை, அங்கிருந்து எழுந்து வந்து தம்மை ஆண்டு அருளும்படி வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

**மாணிக்கவாசகர்**
**திருப்பள்ளி எழுச்சியின்**
**முடிவுரை:**

மாணிக்கவாசகர் கடைப்பிடித்தது ஞான சன்மார்க்கம். நம் சிரநடுவில் இருக்கும் இறைவனைக் கண்டுகொள்வதும், அந்த இறைவனைத் தூல உடம்புடன் வாழும்போது அனுபவிப்பதும் ஞான சன்மார்க்கம்.

ஞான சன்மார்க்கத்தில் இந்தத் தூல உடம்பு மறைந்தவுடன், அந்த உடம்புக்கு உடையவர் பெற்ற இறை அனுபவமும் மறைந்துபோய்விடும்.

தம் சிரநடுவில் இருக்கும் இறைவனை ஞான சன்மார்க்கத்தின் மூலமாக மாணிக்கவாசகர் கண்டு அனுபவித்தவர். சிரநடுவில் இறைவன் எழுந்தருளி இருக்கும் இடம் திருப்பெருந்துறை. இங்குதான் மாணிக்கவாசகரின் ஆன்மா இறை ஒளி பெற்றது. அவருடைய தூல உடலோடு இறைவனை அனுபவித்ததும் அவர் சிரநடுவில் இருக்கும் திருப்பெருந்துறையில்தான்.

மாணிக்கவாசகர் தாம் பெற்ற இந்த இறை அனுபவத்தைத்தான் திருப்பள்ளி எழுச்சிப் பாடலில் சொல்லியிருக்கிறார். இதற்குப் புறச்சான்றாக இருக்கும் ஞான ஆலயம்தான் திருப்பெருந்துறை. இப்போது அது ஆவுடையார் கோயில் என்ற பெயரில் வழங்கப்படுகிறது.

மாணிக்கவாசகர் சிவ தீட்சை பெற்ற இடம் ஆவுடையார் கோயில் என வழங்கி வரும் திருப்பெருந்துறையாகும். திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களில் திருப்பெருந்துறையில் தாம் சிவ தீட்சை பெற்ற அனுபவத்தை மிக அழகாகச் சொல்லியிருக்கிறார் மாணிக்கவாசகர்.

ஒருவரிடம் இருக்கும் ஆணவத்தைப் போக்குவதுதான் தீட்சை. இதை மலபரிபாகம் என்பார்கள். திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகருக்கு சிவபெருமான் தீட்சை அளித்தார். இதன் மூலமாக மாணிக்கவாசகரின் ஆணவத்தை சிவபெருமான் நீக்கி அருளினார்.

மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டின் அமைச்சர். இறைவனுல் தீட்சை பெற்றதும்தான் அமைச்சர் என்ற ஆணவம் அவரைவிட்டு ஒழிந்தது. நண்பரையும் பகைவரையும் ஒன்ருய்ப் பார்க்கும் உயர்ந்த மனப்பக்குவத்தைப் பெற்ருர்.

இந்த மனப்பக்குவ நிலையை 'இருவினை ஒப்பு' என்று சைவ சித்தாந்தம் தெரிவிக்கிறது. இந்த மனப்பக்குவம் பெற்றவர்கள்தான் இறைவனைக் கண்டு, அவனை அனுபவிக்கும் பேராற்றலைப் பெறுகிருர்கள்.

இந்த ஆற்றலை இரண்டு வழிகளில் பெறலாம். யோக சாதனைகளின் மூலமாக இந்த மனப்பக்குவத்தைப் பெறுவது ஒரு வழி. இது ஞானசன்மார்க்கம்.

உயிர்ப்பணி செய்யும் ஆன்ம ஒழுக்கத்தால் பெறுவது மற்ருெரு வழி. இதற்கு அருட் சத்தினிபாதம் என்று பெயர் இதைத்தான் வள்ளல் பெருமான் சுத்த சன்மார்க்கம் என்று சொல்லி இருக்கிருர்.

ஞான சன்மார்க்கத்தின் மூலமாக இறை அருளைத் தம் உள்ளே இருக்கும் திருப்பெருந்துறையில் கண்டுகொண்டவர் மாணிக்கவாசகர். இறைவன் மாணிக்கவாசகரின் அருள் உணர்வாகிய ஞான விசாரக்கண்ணுக்கு முதலில் புலப்பட்டான். மாணிக்கவாசகர் கண்ட இந்தத் தெய்விகக் காட்சி அவருக்கு நினைவு இருக்கும் வரையில் நிற்கிறது. மறதி வந்த போது மறைந்துபோய்விடுகிறது.

இந்தத் தெய்விகக் காட்சி, நினைப்பும் மறப்பும் இல்லாமல் தொடர்ந்து இருக்கும் சுத்த நிலையில் தம்மை வைக்கும்படி மாணிக்கவாசகர் இறைவனை வேண்டிக்கொள்கிருர் திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து தமக்கு சுத்த நிலையை அருள்புரியும்படி இறைவனை மாணிக்கவாசகர் வேண்டும் பாடல்களே அவர் பாடியதிருப்பள்ளி எழுச்சி பாடல்கள்.

அவர் பெற்ற இறைவனின் அருள் அனுபவத்தைப் பற்றிய பாடல்கள்தான் திருப்பள்ளி எழுச்சி பாடல்கள்.

திருப்பெருந்துறையாகிய ஆவுடையார் கோயிலையும், அதைச் சுற்றி இருக்கும் இயற்கைக் காட்சிகளையும்,அந்தக் கோயிலில் காலையில் நடைபெறும் பூசைகளையும், இலக்கிய நயத்துடன் புனைந்து பாடிய பாடல் மட்டும் அல்ல மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சி பாடல்கள்.

மாணிக்கவாசகர் திருப்பள்ளி எழுச்சி பாடல்களில் காட்டும் திருப்பெருந்துறையின் புறக்காட்சிகள் எல்லாம் அவர் தூல உடம்புடன் இருந்த போது பெற்ற இறை அனுபவத்தையே உள்ளுறையாகக் கொண்டு விளங்குகின்றன.

இறைவனைக் கண்டு அனுபவித்து அந்த அனுபவத்தைப் பாடிய மாணிக்கவாசகர் தம் சிரநடுவில் இருக்கும் திருப்பெருந்துறையில் அருள் ஒளியை முதலில் கண்டார். அதை அனுபவித்துக்கொண்டே இருந்தார்.

முடிவில் இறை ஒளி அவர் அகத்திலும், புறத்திலும் சிதம்பரத்தில் தோன்றியது. அந்த இறை ஒளியில் மாணிக்கவாசகர் தம் தூல தேகத்துடன் மறைந்துபோனார். தாம் தூல உடம்புடன் இருந்து அனுபவித்து வந்த இறை அனுபவத்தையும் அப்போதே இழந்துவிட்டார்.

மாணிக்கவாசகர் தூல தேகத்துடன் இருந்தபோது பெற்ற இறை அனுபவங்களை எல்லாம் அவர் பாடியிருக்கும் திருவாசகத்தில் ஓரளவு தெரிந்துகொள்ள முடிகிறது.

"கன்னல் கனிதேர் களிறுஎன என்னையும் கடைமுறை இருப்பது ஆக்கினன்" என்று மாணிக்கவாசகர் தம் இறை அனுபவத்தைச் சொல்கிறார்.

இந்த இறை அனுபவம் மாணிக்கவாசகர் தூல உடம்புடன் இருந்தபோது அவர் உள்ளேயே அவர் அனுபவித்து வந்த இறை இன்பம்தான். அவர் இறை ஒளியில் கலந்துவிட்டபோது, தாம் அனுபவித்து வந்த இந்த இறை அனுபவத்தையும் இழந்துவிட்டார்.

மாணிக்கவாசகர் இறை இன்பத்தை அனுபவிக்க முடியாத அருவமாகப் போய்விட்டார்.

ஆனால் அவர் அருளிய திருவாசகமும், திருக்கோவை யாரும் உருவமாக இருந்து அவர் பெற்றிருந்த இறை அனுபவங்களை நமக்குச் சொல்கின்றன.

மாணிக்கவாசகர் பெற்றிருந்த இறை அனுபவத்தை அவர் பாடியிருக்கும் திருப்பள்ளி எழுச்சி பாடலைக்கொண்டு நாம் ஓரளவு தெரிந்துகொள்கிறோம்.

மாணிக்கவாசகர் ஞான சன்மார்க்கத்தின் மூலமாகப் பெற்ற இறை அனுபவ அறிவோடு திருஅருட்பிரகாச வள்ளலாரையும், அவர் சுத்த சன்மார்க்கத்தின் மூலமாகப் பெற்று இருக்கும் இறை அனுபவத்தை விளக்கும் அவருடைய திருப்பள்ளி எழுச்சி பாடல்களையும் இனிப் பார்ப்போம்.

# திருஅருட்பிரகாசரின்
# திருப்பள்ளி எழுச்சி

திருஅருட்பிரகாச வள்ளலார் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சியைப் பற்றி ஓரளவு ஆரம்பத்தில் கூறியுள்ளோம்.

முதலில் அவர் இறைவனின் பேரருள் உண்மையைத் தெளிவாகத் தெரிந்து கொண்டார். தாம் பெற்ற இறைவனின் பேருளை எல்லா மக்களும் எளிதாக அடையலாம் என்பதையும் உணர்ந்து கொண்டார். அதற்கு உரிய வழி ஜீவகாருண்ய ஒழுக்கம்தான் என்பதையும் கண்டார்.

இதை மக்கள் எல்லாரும் பின்பற்றி உய்வதற்கு வசதியாகத் தாம் பெற்ற இறை அனுபவத்தைத் திருஅருட்பாவில் மிக அருமையாகச் சொல்லியிருக்கிருர்.

இறைவனின் பேருளை அடைவதற்கு வள்ளல் பெருமானின் திருஅருட்பா நமக்கு வழிகாட்டுகிறது. திருஅருளின் பூரண ஞானத்திஞல்தான் ஒருவர் இறைவனைக் காண முடியும். அவ்வாறு இறைவனைக் கண்டவர்தான் மற்றவர்களுக்கும் இறைவனைக் காட்ட முடியும். அவைகளையும் இறைவனை உணர்ந்து அனுபவிக்கச் செய்ய முடியும். இதையெல்லாம் திருஅருட்பா தெளிவாகத் தெரிவிக்கிறது.

சிறிதளவாவது திருஅருள் துணை இருந்தால்தான் கவிகளைப் புனைய முடியும். திருவருள் துணை இல்லாமல் யாராலும், எந்தப் பாடலையும் இயற்ற முடியாது. திருஅருள்

துணை இல்லாமல் இவ் உலகில் எந்தச் செயலும் நடப்பதில்லை; நடக்க முடியாது.

எனவே வள்ளல் பெருமான் பாடியுள்ள திருஅருட்பா ஏதோ சிறிதளவு திருவருள் பெற்றுப் பாடிய பாடல்கள் அல்ல. திருஅருளின் பரிபூரண ஞான அனுபவத்தை வள்ளலார் அனுபவித்தபோது அவர் இதயத்தில் இருந்து பொங்கி வழிந்தவைகளே திருஅருட்பா பாடல்கள்.

வள்ளலார் பெற்ற திருவருள், மற்றவர்கள் பெற்ற அருளைப்போன்றது அல்ல. அவர் பெற்ற திருவருள் சிரநடு சிற்றம்பலத்தில் இருக்கும் இறைவன் அருட்பெருஞ்ஜோதியின் பரிபூரணமான பேரருளாகும்.

அவர் உள்ளும் புறமும் ஒத்து வளர்ந்த இணையற்ற பேரருள் அது. அகில அண்டங்களையும் அவர் காணும்படிச் செய்த ஒப்பற்ற பேரருள் அது.

அந்த அண்டங்களில் எல்லாம் அவர் தம் அருளாட்சியைச் செலுத்தும்படி அவரை வளர்த்த பேரருள் அது.

இந்தப் பேரருள்தான் அவருக்குஅவர் உள்ளேயே சிற்சபை நடனத்தையும் காட்டியது; அவருக்கு வெளியில் அவர் அண்டமெல்லாம் சென்று உயிர்களுக்குப் பணிபுரியும் பொற்சபை நடனத்தையும் காட்டியது.

வள்ளலார் சத்விசாரத்தின் மூலமாக அவர் சிரநடுவில் இருக்கும் இறைவனுடன் ஒன்றி நின்று இன்புறுகிறார். இது தான் அவர் இறைவனைப் பார்த்து உணர்ந்து அனுபவிக்கும் சிற்சபை நடனம்.

இறைவனுடன் ஒன்றி இருந்து சிற்சபை நடனத்தைக் கண்டு இன்புறும் வள்ளல் பெருமான் அந்த இன்பத்தை அனுபவித்துக்கொண்டு அதிலேயே மூழ்கி இருந்துவிடவில்லை. அப்படி இருப்பது தன்னலமாகும்.

வள்ளல் பெருமான் தாம் பெற்ற பேரின்பத்தைத் தாம் மட்டும் அனுபவிக்க விரும்பவில்லை. எல்லாரும் அனுபவித்து மகிழ வேண்டும் என்று விரும்புகிறுர். இதற்காக தன் அகத்தில் இருந்து அனகமாக விரிவடைந்தார்.

தாம் பெற்றிருக்கும் இறை உணர்வின் துணையுடன் இடைவிடாமல் உயிர்க் குலத்துக்குப் பரோபகாரப் பணி ஆற்றி இன்புற்று வருகிறுர். இந்த அருட்பணி தான் அவர் பார்த்து, உணர்ந்து, அனுபவித்து, இன்புற்று வரும் பொற் சபை நடனம். இதுதான் முழுமை பெற்ற இறை அனுபவம். மரணமிலாப் பெருவாழ்வு என்பதும் இதுதான். இதை செய்து காட்டி வரும் முதல் சித்தர் வள்ளல் பெருமான்.

ஆண்டவர் ஒருவரே. அவரே எல்லாமாய் இருக்கிறுர். நம் சிரநடுவில் இருக்கும் திருச்சிற்றம்பலத்தில் அவருடைய அருள் சக்தி பள்ளிகொண்டிருக்கிறது. அதைப் பள்ளியில் இருந்து தட்டி எழுப்பவேண்டும்.

அருள் சக்தியை எழுப்பி, அதன் துணையுடன் அனகமாக விரிவதற்காகத்தான் திருஅருட் பிரகாச வள்ளலார் திருப்பள்ளி எழுச்சியைப் பாடுகிறுர்.

நம் உள் சிரநடுவில் இருக்கும் திருக்கோயில்தான் சத்திய ஞானசபை. இந்த ஞானசபையில் பள்ளி கொண்டு இருக்கும் அருட்பெருஞ் ஜோதியின் அருட்சக்தியைத்தான். பள்ளி எழுந்தருள வேண்டுகிறுர் வள்ளலார்.

வள்ளலார் சத்திய ஞான சபையின் திருமுன் நின்று பாடுகிறுர். வடலூரில் இருக்கும் சத்திய ஞானசபை நமது சிரநடுவில் இருக்கும் சத்திய ஞானசபையை புறத்தே விளக்கும் ஒரு தோற்றமே ஆகும்.

நம் சிரநடுச் சத்திய ஞானசபையில் இருக்கும் அருட் பெருஞ் ஜோதியை வழிபடுவதுதான் சுத்த சன்மார்க்கத்தின் லட்சியம். இதுதான் வள்ளலார் காட்டிய வழி.

சுத்த சன்மார்க்க லட்சியத்தை நிறைவேற்றுவதற்குப் புறத்தே உருவகப் படுத்தியிருக்கும் சத்திய ஞானசபையில்

அமைதியாக இருந்து அங்கு எழுந்தருளும் அருட்பெருஞ் ஜோதியை வழிபடவேண்டும்.

மற்ற திருக்கோயில்களில் நடைபெறுவது போன்ற எந்தவிதமான ஆரவாரங்களும் சத்திய ஞானசபை சந்நிதியில் நடைபெறக்கூடாது.

சிரநடுவில் இருக்கும் சத்திய ஞானசபையின் புறத் தோற்றமே வடலூர்ப் பெருவெளியில் இருக்கும் சத்திய ஞானசபை. இதை மனத்துள் கொண்டு அமைதியாக இருந்து, உள்ளே இருக்கும் அருட்பெரும் ஜோதியை நோக்கித் தியானம் செய்வதற்கு என்றே வள்ளல் பெருமானுல் நிர்மாணிக்கப்பட்டது இந்த சத்திய ஞானசபை.

இதன் உண்மையைப் பூரணமாக யாரும் புரிந்துகொள்ளவில்லை. அதனுல் தான் வடலூர் சத்திய ஞானசபையிலும் ஆரவாரமான திருவிழாக்கள் நடத்துகிருர்கள். இது வள்ளல் பெருமான் கொள்கைக்குச் சற்றும் உகந்தது அல்ல

சுத்த சன்மார்க்கத்தின் இலட்சியத்தை இப்போது மக்களில் பெரும்பாலோர் புரிந்து கொண்டு வருகிருர்கள். சுத்த சன்மார்க்க லட்சியத்தைப் பூரணமாகப் புரிந்து கொண்டவர்கள்தான் தங்கள் சிரநடுவில் இருக்கும் சத்திய ஞானசபை வழிபாட்டுக்கு முக்கியத்துவம் கொடுப்பார்கள்.

சுத்த சன்மார்க்க வழிபாட்டு இலட்சியத்தை மக்கள் எல்லாரும் உணர்ந்து கொள்வதற்காகவே சுத்த சன்மார்க்க முறையில் புற வழிபாட்டையும் நடத்தி வருகிருர்கள்.

சத்திய ஞானசபையில் சுத்த சன்மார்க்க முறையில் நடைபெறும் புறவழிபாட்டின் மூலமாகத்தான் வள்ளலார் பெற்ற சுத்த சன்மார்க்க இலட்சியம் எல்லா மக்களுக்கும் கைகூடவேண்டும்.

சத்திய ஞானசபையில் எழுந்தருளி இருப்பவர் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர். அவரே தந்தையாகவும், தாயாகவும், குருவாகவும், தெய்வமாகவும் இருப்பதை

திருஅருட்பிரகாச வள்ளலார் தம் பொற்சபை நடன அனுபவத்தின் மூலம் மிகத் தெளிவாக உணர்கிருர்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரைத் தாம் பார்த்து அனுபவித்த முறையை எல்லாம் தம் திருப்பள்ளி எழுச்சி பாடல்களில் பாடுகிருர். முதலில் ‘‘என் தந்தையே; பள்ளி எழுந்தருள்வாயே!’’ என்கிருர்.

தொடர்ந்து ‘‘என் அம்மையே! என் குருவே! என் தெய்வமே! என் பதியே! என் அரசே! என் அப்பனே! என் ஐயனே! என் வள்ளலே! எம் தந்தையே!’’ என்று தம் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களில் பாடுகிருர். இறைவனே இவ்வாறு பத்து விதமாகப் போற்றிப் பாடியுள்ளார்.

இவ்வாறு இறைவனே திருஅருட்பிரகாச வள்ளலார் வியந்து வியந்து போற்றுவதன் காரணம் என்ன?

அகத்தில் இருக்கும் அருட்பெரும் ஜோதி ஆண்டவர் தான் அவரவர் செய்கின்ற செயலுக்கு ஏற்ப தந்தை, தாய், குரு முதலியவர்களாகத் தோன்றுகிருர். இருந்தாலும் நம் சிரநடுவில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் ஒருவரைத் தான் மனத்தில் நிறுத்தி வழிபடவேண்டும்.

நம் உள் இருக்கும் இறைவனுடன் நாம் ஒன்றி நின்ருலும், மக்களில் ஒவ்வொருவரிடமும் அதே இறைவன் தான் இருக்கிருன் என்பதை உணர்ந்து அவர்களிடம் அன்பு செலுத்த வேண்டும். உள்ளும் புறமும் ஒத்த மனதுடன் அவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டும்.

நம் ஒவ்வொருவர் உள்ளும் அருட்பெருஞ் ஜோதி எழுந்தருளியிருக்கிருர். நாம் தயவுடன் வாழ்ந்து இறை அனுபவம் பெறுவதற்காகவே அவர் உயிர்களில் பல்வேறு தோற்றங்களையும் படைத்து அருளி இருக்கிருர்.

எனவே நம் உள் இருக்கும் இறைவனின் பேரருளைப் பெறுவதற்கு வெளி உலகில் வாழும் உயிர்களிடம் இரக்கத்துடன் இருக்க வேண்டும். நம் அகத்தில் இருக்கும் இறை

வனுடன் ஒன்றி நின்று அக வாழ்வையும், விரிந்து பரந்த அனக வாழ்வையும் வாழ வேண்டும். அதாவது உயிர்க் குலத்துக்குத் தயா உணர்வுடன் தன்னலம் இல்லாமல் தொண்டு புரிந்து வரவேண்டும்.

இவ்வாறு பயன் கருதாமல் கருணையுடன் தயவு வாழ்க்கை வாழ்ந்தால் நம்முள் பள்ளிகொண்டிருக்கும் அருட் பெருஞ் ஜோதி தம் பள்ளியில் இருந்து எழுந்து நமக்கு அருள் புரிவார். நம் உள்ளே பரிபூரணமாக நிரம்பி நிற்பவர் அருட்பெரும் ஜோதி ஆண்டவர். அவர் நம்மையும் தம்மைப்போல் நிலைத்த இன்பத்துடன் வாழ்ந்து கொண்டு இருக்கும்படிச் செய்வார்.

மாணிக்கவாசகர் ஞான சன்மார்க்கத்தின் மூலமாக இறைஅனுபவத்தைப் பெற்றவர்.

அவர் தாம் பெற்ற இறை அனுபவத்துடன் இவ்வுலகில் 32 ஆண்டுகள் வாழ்ந்தார். முடிவில் சிவஜோதியில் கலந்து கரைந்து மறைந்துபோனர்.

அவர் தூல உடம்புடன் இவ்உலகில் இருந்தபோது, தாம் பெற்ற இறை அனுபவத்தை அவர் பாடியிருக்கும் திருப் பள்ளி எழுச்சி பாடல்களில் காண்கிறோம்.

வள்ளலாரோ சுத்த சன்மார்க்கத்தின் மூலமாக இறை அனுபவத்தைப் பெற்றவர். தாம் பெற்ற இறை அனுபவத் தினல் அனகமாக விரிந்து மரணமிலாப் பெருவாழ்வு பெற் றிருக்கிறவர். அவர் ஐம்பத்தொரு ஆண்டுகள் நம் எல்லாருக் கும் தெரியும்படி தூல உடம்புடன் வாழ்ந்தவர். இப்போது சுத்த பிரணவ ஞான வடிவத்துடன் திருஅருட்பிரகாச வள்ளலாக இருந்து வருகிறவர்.

சன்மார்க்க முறையில் அகத்தில் இருக்கும் இறை வனுடன் ஒன்றி அனக வாழ்வு வாழத்தொடங்கும் எல்லாரும் வள்ளல் பெருமானை இன்றைக்கும் பார்க்கலாம். அவர் பெருங் கருணையைப் பெற்று இன்புறலாம்.

வள்ளல் பெருமான் தாம் பெற்ற இறை அனுபவத்தைத் திருப்பள்ளி எழுச்சி பாடல்களாகப் பாடி இருக்கிருர். வள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சி பாடல்களில் இறைவனின் பரிபூரணத் தன்மையைக் காணலாம். வள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சி பாடல்களின் சிறப்பு முழுவதையும் வெறும் வார்த்தைகளின் மூலமாக விளக்கிச் சொல்லிவிட முடியாது. வள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சி பாடல்களை விளக்கிக் காட்டும் ஆற்றல் வாய்ந்த சொற்களும் என்னிடம் இல்லை.

மக்கள் இறைவனைப் பற்றிக் கற்பனை செய்து கழித்து வந்த காலம் எல்லாம் வீண் காலமாகவே போய்விட்டது. அதை நினைத்து இனியும் காலத்தை வீணுக்கவேண்டாம்.

கற்பனை கடந்த உண்மைக் கடவுளான அருட்பெருஞ் ஜோதியை நேருக்கு நேராகக் காணுகின்ற வாய்ப்பை வள்ளலார் நமக்குக் கொடுத்திருக்கிருர். இந்த நல்ல வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அருட்பெருஞ் ஜோதியினுல் அடையத் தக்க பெரும் பயனைப் பெற்றுக்கொள்ள முயல்வதே சிறப்புடையதாகும்.

இந்த லட்சியத்தை அடைவதற்கு வள்ளல் பெருமான் அருளி இருக்கும் திருப்பள்ளி எழுச்சி பாடல்களை ஒரு கருவியாகக் கொண்டு சுத்த சன்மார்க்கத்தின் லட்சியப் பொருளை விளங்கிக் கொள்வோம். சுத்த சன்மார்க்க வாழ்க்கையை மேற் கொள்வோம்.

வள்ளல்பெருமானின் திருப்பள்ளி எழுச்சி பாடல்களின் விளக்கத்தை உணர்ந்து கொண்டு அனகமாக விரிவோம்.

# 1

பொழுது விடிந்தது; என் உள்ளமென் கமலம்
பூத்தது பொன்ஞெளி பொங்கியது எங்கும்;
தொழுது நிற் கின்றனன் செய்பணி எல்லாம்
சொல்லுதல் வேண்டும்என் வல்லசற் குருவே!
முழுதும்ஆ ஞன்என ஆகம வேத
முறைகள் எலாம் மொழி கின்றமுன் னவனே!
எழுதுதல் அரியசீர் அருட்பெருஞ் ஜோதி!
என் தந்தையே! பள்ளி எழுந்தருள் வாயே!

ஒவ்வொருவர் சிரநடுவிலும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் பள்ளிகொண்டு இருக்கிருர்.

அவர் தம்முடைய திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்த நமக்கு அருள்புரியும்படி தயவுடன் வேண்டிக்கொள்வதுதான் திருப்பள்ளி எழுச்சி பதிகம்.

இந்தப் பதிகத்தில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பாடல் முடிவிலும் ''எழுந்து அருள்வாயே!'' என்று இறைவனை வள்ளல் பெருமான் வேண்டுகிருர்.

மாணிக்கவாசகரோ தம்முடைய திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களின் முடிவில், ''எழுந்து அருளாயே!'' என்று வேண்டிக்கொண்டு இருக்கிருர்.

மாணிக்கவாசகர் உபயோகித்திருக்கும் ''எழுந்து அருளாயே!'' என்ற சொற்றொடர் ''எழுந்து அருள்வாய்'' என்ற பொருளைத் தருவதோடு, எழுந்து அருளமாட்டாய் என்ற பொருளையும் தந்துவிடுகிறது.

வள்ளல் பெருமானின் எழுந்து அருள்வாய் என்ற சொற்றொடர் எழுந்து அருளவேண்டும் என்ற ஒரே பொருளில் இருக்கிறது. நேரான தெளிவான பொருளைத் தருகிறது. எதிர்மறைப் பொருளைத் தரவில்லை.

மாணிக்கவாசகர் ஒரு ஞான சன்மார்க்கி. இதன் மூலமாக அவர் இறை அனுபவத்தைப் பெற்றவர். சிற்சபை நடனத்தை மட்டும் கண்டவர்.

மாணிக்கவாசகர் காலம் வரையில் இருந்த ஞானிகளின் குறிக்கோள் எல்லாம் சிற்சபை நடனத்தை மட்டும் காண்பதுதான். சிற்சபை நடனத்தைக் கண்டவுடன் அந்த இறை அனுபவ ஆசையில் இறைவனுடன் கலந்துவிடுவதுதான் அவர்களுடைய குறிக்கோளாக இருந்தது. மாணிக்கவாசகரின் குறிக்கோளும் இறைவனுடன் கலந்துவிடுவது தான் என்பதை அவருடைய பாடல்களின் மூலமாக நன்கு தெரிந்துகொள்ள முடிகிறது.

உள்ளத்தில் என்ன எண்ணுகிறோமோ அதுதான் வாக்கிலும் வரும். மெய்யிலும் பதியும். மாணிக்கவாசகர் உள்ளத்தில் எந்த எண்ணம் இருந்ததோ, அதுதான் அவருடைய வாக்கிலும் வந்திருக்கிறது.

திருப்பள்ளியில் இருந்து எழுந்து எனக்கு அருள் புரிய வேண்டும் என்று இறைவனிடம் தெளிவாக மாணிக்கவாசகரால் கேட்டுக்கொள்ள முடியவில்லை.

காரணம் அவருடைய நோக்கம் எல்லாம் இறைவனுடன் கலந்துபோவதுதான். அதனால் அவர் வாக்கில் ''எழுந்து அருளாயே!'' என்று வந்திருக்கிறது.

இறைவன் மாணிக்கவாசகரின் வேண்டுகோளை அவர் விரும்பிய அளவில் நிறைவேற்ற முன் வருகிறார்.

மாணிக்கவாசகர் இறைவனுடன் தம்மை ஐக்கியப் படுத்திக் கொள்வதற்காகவே ''எழுந்து அருளாய்!'' என்று கேட்கிறுர். இறைவனும் வாதவூரரின் ஆசையை நிறைவேற்றிவிடுகிறுர். தம்முடன் அவரை ஐக்கியப்படுத்திக் கொண்டு விடுகிறுர்.

வள்ளலாரோ சுத்த சன்மார்க்கி. அவர் தம் அக இறை அனுபவத்துடன் புற இறை அனுபவத்தையும் கண்டவர். அதாவது சிற்சபை நடனத்தையும், பொற்சபை நடனத்தையும் கண்டு அனுபவித்துக்கொண்டிருப்பவர்.

வள்ளல் பெருமான் இறைவனுடன் கலந்து போக விரும்பவில்லை. காரணம் இறைவனின் அருளைப் பெற்று அதன் மூலம் இவ்வுலகில் மரணமிலாப் பெருவாழ்வைப் பெற வேண்டும் என்று விரும்புகிறுர். சிற்சபை நடனத்தை மட்டும் இல்லாமல், பொற்சபை நடனத்தையும் கண்டு அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டும் என்று விரும்புகிறுர்.

அதனுல் இறைவனிடம் ''திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து எனக்கு அருள வேண்டும்'' என்று தெளிவாக அழுத்தமாகக் கட்டளையிட்டுக் கேட்பதுபோல ''எழுந்து அருள்வாயே!'' என்று கேட்கிறுர்.

இறைவனும் இராமலிங்க அடிகள் விருப்பப்படியே, அவர் அகத்தும் புறத்தும் இருந்து அவருக்கு அருள் புரிந்து கொண்டு இருக்கிறுர். அதனுல் தாம் பெற்ற நிறைவான இறை அனுபவத்தையே அடிகள் அனகமாக விரித்துக் கொண்டு அகில அண்டங்களிலும் பணிபுரிந்து வருகிறுர்.

இராமலிங்கமாக இருந்த அடிகளார் முத்தேக சித்தி பெற்று சுத்த பிரணவ ஞான தேகத்துடன் திருவருட்பிரகாச வள்ளலாராக விளங்கி வரும்படி அருட்பெருஞ்ஜோதி இறைவன் அவருக்கு அருள் புரிந்து இருக்கிறுர்.

இனி வள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களின் பொருளை உணர்ந்து கொள்வோம். அருட்பெருஞ் ஜோதியின்

அருளைப் பெறுவோம். உலகியலில் நாமும் பரிபூரண அருள் வாழ்வு பெற முயல்வோம்.

அருட்பெருஞ் ஜோதி ஆகிய சூரியன் அகவானத்தில் உதயமாகிறுன். உள்ளத்தாமரை மலர்ந்துவிட்டது. அது மென்மையான தயாவடிமாக இருக்கிறது. அதன் பொன் ஞெளி பொங்கி எங்கும் பரவுகிறது.

எல்லாம் வல்ல சற்குருவே! உம்மைத் தொழுது நிற்கிறேன். நான் என்னென்ன செய்யவேண்டும் என்பதை எனக்குக் கட்டளை இடுங்கள்.

எல்லாருக்கும் எல்லா உயிர்களுக்கும், எல்லாப் பொருள்களுக்கும் மூலமாக இருப்பவர் நீர்! தங்களை முழுவதும் ஆனவர் என்று வேதங்களும் ஆகமங்களும் முறையிடுகின்றன. சைவத் திருமுறைகளும் தங்கள் பெருமையையே சிறப்பித்துப் பேசுகின்றன.

ஆனல் அவைகள் எல்லாம் நான் தங்களைத் தெரிந்து கொண்டதுபோல் தெரிந்துகொள்ளவில்லை. அவைகளால் அது முடியக்கூடிய காரியமும் அல்ல. அவைகளுக்கு எல்லாம் மேலே அருள் அம்பரப்பரவெளியிலே தாங்கள் தாண்டவம் புரிகிறீர்கள். அவைகளைத் தொட்டும் தொடாமலும் தாண்டவம் புரிகிறீர்கள். அப்படி இருக்கும் தங்களை அவைகளால் எப்படி அறிய முடியும்?

தங்களுடைய பெருமையும் சிறப்பும், அருட்பெரும் நிலைகளும் அருள் அனுபவம் இல்லாத மனத்தாலும், வாக்காலும், உடலாலும் தீண்டமுடியாதவை.

எனவே வேதங்களும், ஆகமங்களும் தங்களை எப்படிச் சொற்களால் சொல்லி எழுத்துக்களால் எழுதி விளக்கிக் காட்டி இருக்க முடியும்?

எழுதிக் காட்டுவதற்கு அரிய என் அருட்பெருஞ் ஜோதித் தந்தையே! இப்போதே தாங்கள் திருப்பள்ளியிலிருந்து எழுந்து வந்து எனக்கு அருள் செய்திட வேண்டும்.

எனக்கு முன்னுல் இருந்த ஞானியர்கள், தங்களைப் பள்யியிலிருந்து எழுப்பி விட்டார்கள். அதனுல் எனக்குத் தங்களைப் பள்ளியிலிருந்து எழுப்பும் வேலை இல்லை.

பள்ளியில் இருந்து எழுந்து என் அகத்தில் அருள் புரிந்துகொண்டு இருக்கும் தாங்கள் அனமாக விரிந்து உலக உயிர்களுக்கும் அருள் புரிய வேண்டுகிறேன்.

என் குறிக்கோளை நிறைவேற்றிக்கொள்ளவே இந்தத் திருப்பள்ளி எழுச்சி பாடலைப் பாடுகிறேன். பள்ளியைவிட்டு எழுந்து நான் அனக அருள் செயல் புரிய என்னை ஆளாக்கி அருள வேண்டுகிறேன்.

நிலைத்திருக்கும் தங்களையும், தங்கள் அருட் செயலையும் போல் தங்கள் அருளால் பெற்ற அனக வாழ்வும் நிலைத்து இருக்கக்கூடியவை. தங்கள் அனக அருளால் நானும் தங்களை அனுபவித்துக்கொண்டே நிலைத்துஇருப்பேன்.

"தங்கள் அருட்செயல் வாழ்க! வாழ்க!" எனப் போற்றிப் பணிந்து வணங்குகிறேன்.

தங்களை வாழ்த்துவதன் மூலமாக, என்னையும் நான் வாழ்வித்துக் கொள்கிறேன்.

இவை எல்லாம் தங்கள் திருஅருட் செயலே!

# 2

துற்குண மாயைபோய்த் தொலைந்தது; ஞானம்
தோன்றிடப் பொன்னொளி தோற்றிய கதிர்தான்
சிற்குண வரைமிசை உதயம்செய் தது; மா
சித்திகள் அடிப்பணி செய்திடச் சூழ்ந்த;
நற்குண சன்மார்க்க சங்கத்தார் எல்லாம்
நண்ணினர்; தோத்திரம் பண்ணிநிற் கின்றூர்
எற்குஉணவு அளித்தஎன் அருட்பெருஞ் ஜோதி!
என் அம்மை யே!பள்ளி எழுந்தருள் வாயே!

முதல் பாடலில் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை வள்ளலார் தந்தையாக அழைத்திருக்கிறூர். இந்தப் பாடலில் தாயாக அழைத்துப் போற்றுகிறூர்.

வெளியில் சூரியன் உதயமாகிறது. அதனுல் இருள் அகல்கிறது. இது போல நம் உள்ளே அருள் சூரியன் உதய மாகிறுன். நம்மிடமிருந்த அறியாமை என்னும் இருள் அகல்கிறது. எங்கும், எதிலும் மெய்யுணர்வு ஓங்கிப் பரவுகிறது. நம்மிடம் இருந்த மயக்கம் தீர்கிறது.

தந்தையாக அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை அழைத்தபோது இருந்த உணர்வைவிட, இறைவனைத் தாயாக அழைக்கும்போது தோன்றும் உணர்வு இன்னும் நெருங்கிய உரிமை பெற்று விளங்குகிறது.

நமக்கு இருக்கும் அறியாமை மயக்கம் பலவகையான துன்பங்களைத் தரக்கூடியவை. அதனுல் அதைத் துற்குண

மாயை என்கிருர் வள்ளலார். இப்போது இந்தத் துற்குண மாயையும் நம்மைவிட்டுப் போய்விடுகிறது.

அருள்ஒளி, மாசு மறு அற்றது. தூய்மையானது. அதனுல் அதைப் ''பொன் ஒளி'' என்று போற்றுகிருர்.

அறியாமை நம்மைவிட்டு நீங்கியதும், சிற்குண வரை மிசை அதாவது அறிவுக்குரிய தன்மைகள் எல்லாம் உடைய மலேமீது, அருள் ஒளி பரப்பும் சூரியன் தன் அருள் மயமான பொன்ஒளிக் கதிர்களே வீசிக்கொண்டு உதயம் ஆகிருன்.

அப்போது பலவகையான சித்திகள் நம்மிடம் தோன்றுகின்றன. உலக உயிர்களுக்குப் பணியாற்றுவதற் கென்றே அவை நம்மிடம் தோன்றுகின்றன.

சிற்குணம் என்பது அறிவின் தன்மை. இது உயிர் களிடம் முதலில் தோன்றுகிறது. படிப்படியாக மற்ற உயிர் களிலும் தோன்றி ஓங்கி உயர்ந்து வளர்கிறது. முடிவில் ஆறறிவு உயிராகிய மனிதனில் அவன் மனவளத்தைக் காட்டும் பகுத்தறிவுச் சிகரமாக விளங்குகிறது.

இதற்கும் மேலேதான் அருட்பெருஞ் ஜோதி தோன்று கிறது. இதைச் சுத்த சன்மார்க்க சங்கத்தார் எல்லாரும் காண்கிருர்கள். மிகுந்த மகிழ்ச்சி அடைகிருர்கள். அற்புத சித்திகள் எல்லாம் பெறுகிருர்கள். இந்த அற்புத சித்திகள் அவர்களுக்கு ஏவல் செய்யத் தயாராயிருக்கின்றன.

இந்தச் சித்திகளுக்கு மதிப்பளித்து அதன் பயனே அனுபவித்தவண்ணம் அவர்கள் அங்கேயே நின்றுவிட வில்லே. அதையும் தாண்டி அருட்பெருஞ் ஜோதி ஆண்ட வரின் சந்நிதிக்குள் செல்கிருர்கள். அருட்பெருஞ் ஜோதியை மனம் உருகப் பாடிப் பரவுகிருர்கள்.

இந்தச் சுத்த சன்மார்க்கக் கூட்டத்தில் வள்ளல் பெரு மானும் இருக்கிருர். அவருக்கு அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் அருமைத் தாயாகவே தோன்றுகிருர். அந்தக் கருணே நிறைந்த தாயை அழைத்துப் போற்றுகிருர்.

அம்மையே! தாங்கள் தங்கள் திருக்கரங்களினுல் எனக்கு அமுத உணவையே அளித்தவர்கள் அல்லவா? இப்போது திருப்பள்ளியில் இருந்து எழுந்து வாருங்கள். தங்கள் தனிப்பெரும் தயவால் நான் உள்ளும் புறமும் ஒளிரும்படி எனக்கு அனக வாழ்வு அளித்து அருள் புரியுங்கள் என்று வேண்டுகிருர். அருட்பெருஞ்ஜோதி அம்மையைப் போற்றிப் பிரார்த்திக்கிருர்.

# 3

நிலம்தெளிந் தது;கணம் மழுங்கின; சுவணம்
நீடுஒளி தோன்றிற்று; கோடுஒலிக் கின்ற;
அலர்ந்தது தாமரை; ஆணவ இருள்போய்
அழிந்தது; கழிந்தது மாயை; மால்இரவு
புலர்ந்தது; தொண்டரோடு அண்டரும் கூடிப்
போற்றியோ சிவசிவ போற்றிஎன் கின்றார்.
இலங்குஉரு அளித்தஎன் அருட்பெருஞ் ஜோதி!
என்குரு வே!பள்ளி எழுந்தருள் வாயே!

பூமியில் இருள் சூழ்ந்திருக்கிறது அதன் மீது அருணனின் ஒளி பரவுகிறது. பூமியைச் சூழ்ந்திருந்த இருள் சிறிது சிறிதாக விலகுகிறது. பூமி தெளிவாகத் தெரிகிறது.

விண்ணிலே கண் சிமிட்டிக் கொண்டிருந்த நட்சத்திரங்களின் ஒளி கொஞ்சம் கொஞ்சமாக மங்குகிறது. முடிவில் நட்சத்திரங்களே மறைந்து விடுகின்றன.

அங்கு பொன் ஒளி ஓங்கி விரிந்து பரவுகிறது. வெண் சங்குகளின் மங்கல ஒலி முழங்குகிறது. தாமரை மலர்கிறது.

இவை எல்லாம் காலை வேளையில் நமக்குப் புறத்தில் தோன்றும் நிகழ்ச்சிகள். அகத்தில் அருள் ஞாயிறு உதயமாகிறது. அதன் பொன் ஒளியால் நம்மிடம் நீண்ட நெடுங் காலமாக மண்டிக்கிடக்கும் ஆணவ இருள் மறைகிறது. ஆணவத்தினால் நம்முள் ஏற்பட்டு இருந்த அறியாமை என்னும் இருளும் மறைந்து ஒழிந்து போகிறது.

தொண்டர்கள் உள்ளத்திலிருந்த ஆணவ இருளும் அறியாமை இருளும் மறைவதுடன் அவர்களிடம் இருந்து வந்த மயக்கமும் நீங்கிவிடுகின்றன. அவர்கள் உள்ளத்தில் அருள் பொழுது புலர்கிறது.

இதுவரையில் தொண்டர்கள் என்னென்னவோ செயல் களில் ஈடுபட்டிருந்தனர். அதை எல்லாம் விட்டுவிட்டுத் தேவர்களுடன் சேர்ந்து இறைவன் சந்நிதியின்முன் கூடு கின்றனர். ''ஓம், சிவ! சிவ! சிவ!'' என்று இறைவனைப் போற்றி வணங்குகின்றனர்.

இந்த மந்திரத்தின் அனுபவப் பொருள் அதை ஓது கின்றவர், திருவருளால் சிவமயம் ஆவதுதான். இந்தச் சிவ அனுபவப் பேறு தற்காலிகமானது. நித்திய வாழ்வைக் கொடுப்பது அல்ல. இது ஞான சன்மார்க்கத்தின் முடிவு.

இந்தச் சிவானுபவத்தை எதிர்பார்த்துத்தான் ''ஓம் சிவ! சிவ!'' என்று தொண்டர்களும் தேவர்களும் இறை வனைப் பாடிப் பரவுகின்றனர்.

வள்ளல் பெருமானே புதிய சுத்த சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர். அவர் அருட்பெருஞ் ஜோதி ஆண்ட வரை ''என் குருவே!'' என்று அழைக்கிறார். ''எனக்கு ஒளி உடலை வழங்கிய அருட்பெருஞ் ஜோதிக் குருவே!'' என்று பெருமிதம் அடைகிறார்.

''தாங்கள் எனக்கு வழங்கிய ஒளி உடலைக்கொண்டு நான் அனக வாழ்வு வாழ்வதற்கு அருள் புரியவேண்டும்; இதை எனக்கு வழங்குவதற்குப் பள்ளியில் இருந்து எழுந்து வருவீராக'' என்று இறைவனைப் பணிவுடன் வேண்டுகிறார்

உண்மையான குரு ஒருவரே. அவர்தான் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர். அவர் எப்பொழுதும் நம்முடன் இருப் பவர். நம் உள்ளேயே உறைபவர். நம் உடம்பிலும், உணர்விலும் தாம் இருப்பதைத் தொட்டுக் காட்டி நம்மைப் பேரின்பத்துக்கு அழைத்துச் செல்பவர்.

அருட்பெருஞ் ஜோதிக் குருவின் அருள் துணையில்லாமல் ஒருவர் படிக்கின்ற படிப்பும், செய்கின்ற செயலும், உணர்கின்ற உணர்வும், சாதிக்கின்ற சாதனைகளும், பெறுகின்ற அனுபவங்களும் நிலையற்றவை.

அருட்பெருஞ் ஜோதியாகிய குருநாதன் நம்முடைய அறிவில் அறிவுக்கு அறிவாய் தாம் இருப்பதை தம் அருளால் தொட்டுக் காட்டுகிறார். தம்மிடம் நம்மை தம் பெரும் கருணையால் அழைத்துச் செல்கிறார்.

இவ்வாறு அருட்பெருட்ஜோதி ஆண்டவர் நம்முள் தாம் இருப்பதைத் தொட்டுக் காட்டி நம்மை உணரும்படிச் செய்வதுதான் மெய்ஞ்ஞான அனுபவம்.

புறத்தில் உள்ள பொருள்களைச் சுட்டிக் காண்பித்து அதன் மூலம் எப்படி விளக்கினாலும் மெய்ஞான அனுபவத்தை விளங்கிக் கொள்ள முடியாது.

இதைத்தான் 'தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது' என்று சொல்கிறார்கள்.

எனவே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரையே குருவாகக் கொள்ள வேண்டும். அவரைத் தரிசித்துப் பெரு வாழ்வு பெறுவதே நம் கடமையாக இருக்க வேண்டும்.

# 4

கல்லாய மனங்களும் கரையப்பொன் ஒளிதான்
கண்டது; கங்குலும் விண்டது; தொண்டர்
பல்லாரும் எய்தினர்; பாடிநின்று ஆடிப்
பரவுகின் றார்;அன்பு விரவுகின் றாராய்
நல்லார் மெய்ஞ்ஞானிகள் யோகிகள் பிறரும்
நண்ணினர்; சூழ்ந்தனர்; புண்ணிய நிதியே!
எல்லாம்செய் வல்லஎன் அருட்பெருஞ் ஜோதி!
என்தெய்வ மே!பள்ளி எழுந்தருள் வாயே!

சூரியனின் ஒளியால், அதிலிருந்து வரும் ஒளிக்கதிர் அலைகளின் சக்தியால்,உலகில் உள்ள கருங்கற்களும் உருகிக் கரைந்து காற்றோடு காற்றாய்க் கலந்துவிடும். இந்தச்சக்தி சூரியனின் ஒளியில் இருக்கிறது.

ஆனால் கருங்கல்லாக இறுகிவிட்ட நம் மனக்கருங் கல்லைக் கரைக்கக்கூடிய சக்தி அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் பொன் ஒளியில்தான் இருக்கிறது.

இத்தகைய சக்தியை உடைய அருட்சூரியன் நம் உள்ளே உதயமாகி இருக்கிறான். அதனால் அறியாமை என்னும் இருள் விலகுகிறது.

தொண்டர்கள் உத்தர ஞான சித்திபுரத்தில் சத்திய ஞானசபையின் முன் வந்து கூடுகிறார்கள். அன்பு கனியப் பாடுகிறார்கள். ஆடுகிறார்கள். பாடுவதால் அவர்கள் மனம்

பரவசத்தில் மூழ்கி இருப்பது தெரிகிறது. ஆடுவதால் அவர்கள் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவனிடம் வைத்திருக்கும் அன்பு வெளிப்படுகிறது.

உயிர்க்குலத்துக்குத் தொண்டு புரிவதே உண்மையான ஆட்டமாகும். இதுவே அருள்கூத்து.

அன்புருவமான அருட்பெருஞ்ஜோதி நம்உள் இருந்து அருள் நடனம்புரிந்து கொண்டு இருக்கிறார். இதனால் தொண்டர்கள் இறைவனைப் பாடிப் பரவுகிறார்கள்.

ஒருவருக்கொருவர் இறைவனின் பெருமையைப் பேசி மகிழ்கிறார்கள். இவர்களிடையே மெய்ஞ்ஞானிகளும், யோகிகளும், சித்தர்களும், முத்தர்களும், பக்தர்களும் இன்னும் பலரும் வந்து சேருகிறார்கள். வள்ளல் பெருமானும் இவர்களுடன் சத்திய ஞானசபைச் சந்நிதியில் இருக்கிறார்.

"என் தவப்பயனாக எனக்குக் கிடைத்த பெரும் செல்வமே! எல்லாம் வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே! என் தெய்வமே! திருப்பள்ளிலிருந்து எழுந்து வந்து எனக்கு அனக வாழ்வு அருளவேண்டுகிறேன். தாங்களே எல்லாம் செய்ய வல்லவர். இப்போதே திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து உலகம் முழுவதும் பார்க்கும்படி என்னில் கலந்துகொள்ள வேண்டுகிறேன். என் வாழ்வு அனகமுற அருள்புரிய வேண்டுகிறேன்."

"எனது பாமாலையை என் தலைவர் மிகுந்த அன்புடன் அணிந்துகொண்டார். என் பாமாலைக்குத் தனிச்சிறப்பு உண்டு என்பதையும் அவர் நன்றாக அறிவார். அதற்கு இருக்கும் ஒரு தனிச்சிறப்பு என்ன என்பது உனக்குத் தெரியுமா?" என்று தன் மனத்தையே தோழியாகப் பாவனை செய்துகொண்டு அதை வள்ளலார் கேட்கிறார்.

இந்தக் கேள்விக்கு அனுபவ மாலையில் அவரே மிகத் தெளிவாகப் பதிலும் சொல்லியிருக்கிறார்.

நான்தொடுக்கும் மாலைஇது பூமாலை எனவே
நாட்டார்கள்; முடிமேல் நாட்டார்கள் கண்டாய்!
வான்தொடுக்கும் மறைதொடுக்கும் ஆகமங்கள்
தொடுக்கும்
மற்றவையை அணிவார்கள் மதத்துரிமை யாலே
தான்தொடுத்த மாலைஎலாம் பரத்தையர்தோள் மாலை
தனித்திடும்என் மாலைஅருட் சபைநடுவே நடிக்கும்
ஊன்றெடுத்த மலர்கள்அன்றி வேறுகுறி யாதே
ஓங்குவதுஆ தலில் அவைக்கே உரித்தாகும் தோழி

நான் தொடுக்கும் இந்த மாலை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் திருவடிகளுக்கே உரியதாகும்.

திருவடி மலர்களோ இரண்டு. ஒன்று ஊன்றிய திருவடி மலர். மற்றொன்று தூக்கிய திருவடி மலர். அக அனுபவத்துக்கு உரியது ஊன்றிய திருவடி மலர். புற அனுபவத்துக்கு உரியது தூக்கிய திருவடி மலர்.

இந்த இரண்டு திருவடி மலர்களையும் சேர்த்து அனுபவிப்பதுதான் அனக வாழ்வு ஆகும்.

உள்ளும் புறமும் ஒத்த அனக அனுபவத்தை எனக்கு அருளும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவனிடம் வேண்டுவதே என் பாமாலையின் குறிக்கோள்.

அமரர்கள் முதலிய மற்றவர்கள் தொடுக்கும் மாலைகள் எல்லாம் மத உரிமையைக்கொண்ட தலைமைத் தெய்வங்களே விரும்பி அணியக்கூடிய மாலைகள். அவர்கள் என் மாலையை அணியத் தகுதியுடையவர்கள் அல்லர்.

அவர்களின் மாலைகள் ஒரே தலைவனை வணங்கி மகிழாமல் பல தலைவர்களையும் வணங்கி மகிழும் பரத்தையரின் தோள்களில் கிடந்த மாலைகள்என அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரால் வெறுத்து ஒதுக்கிப் புறக்கணிக்கப்படுவன.

என் மாலையோ திரு அருள் சபையில் திரு நடம் புரியும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் நிலைத்த திருவடிகளை

மட்டுமே குறிப்பன. அதனுல் என் மாலையைத்தான் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் உரிமையுடன் விரும்பி ஏற்று அணிந்துகொள்வார். அணிந்தும் கொண்டார். எனக்கு அனக வாழ்வையும் அருளியிருக்கிருர்.

என் பாமாலையையே அதன் தன்மையை உணர்ந்து அருட்பெருஞ் ஜோதியின் திருவடிகளுக்கு யார் சூட்டினுலும் திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து அவர்களுக்கும் எனக்கு அருளியதுபோலவே உள்ளும் புறமும் ஒத்த அனக வாழ்வை அருள் பாலிப்பார்.

எல்லாருடைய சிரநடுவில் இருந்தும் தாங்கள் பள்ளி எழுந்துவிட்டீர்கள். அவர்கள் யாரிடமும் தாங்கள் அனக முருமல் இருந்து வருகிறீர்கள்.

உள்ளும் புறமும் ஒத்து செயல்படும் ஆற்றலை அவர்களுக்கு அளிக்காமல் இருக்கிறீர்கள்.

இதனுல் உலகம் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறது. உலகம் இதுவரையில் துன்பப்பட்டது போதும்.

உலகில் அருள் எழுந்து ஓங்கி வளரும்படிச் செய்வதற்கு இப்போது எனக்குப் பூரண ஆற்றலை உடைய அனக வாழ்வை அருளவேண்டுகிறேன்.

நான் பெற்ற பேற்றை உலகம் எல்லாம் பெறவேண்டும் என்பதற்காகவே தங்கள் அருள் செயலை வேண்டுகிறேன்.

தாங்கள் தயவே வடிவானவர். தயவு கூர்ந்து என் வேண்டுகோளை நிறைவேற்றி அருள் புரியவேண்டும்.




# 5

புன்மாலை இரவெலாம் புலர்ந்தது; ஞானப்
பொருப்பின் மேல்பொற்கதிர் பொலிந்தது; புலவோர்
சொன்மாலை தொடுத்தனர்; துதித்துநிற் கின்றார்;
சுத்தசன் மார்க்கசங்கத்தவர் எல்லாம்
மன்மாலை மாலையா வந்துசூழ் கின்றார்;
வானவர் நெருங்கினர்; வாழிஎன் கின்றார்
என்மாலை அணிந்தஎன் அருட்பெருஞ் ஜோதி!
என்பதியே! பள்ளி எழுந்தருள் வாயே!

அறியாமை இருள் அகன்றது. மருள் அறிவு என்ற இருளும் மறைந்தது. புன்மாலை இருளும் போயிற்று.

இவ்வாறு அக இருள் விலகியதும், ஞான மலைமேல் அருள் கதிரவன் தன் பொன் ஒளியைப் பரப்பிக்கொண்டு ஜகஜ்ஜோதியாக எழுகிறான்.

அருள் புலவர்கள் அப்பொன் ஒளியைப் போற்றி மகிழ்ந்து வணங்குகிறார்கள்.

அவர்களுடன் வரிசை வரிசையாகச் சுத்த சன்மார்க்கத் தொண்டர்களும் வந்து சூழ்ந்து நிற்கிறார்கள். வானவர்களும் நெருங்கி வந்து வாழ்த்துகிறார்கள்.

இவர்களுடன் வள்ளல் பெருமானும் இருக்கிறார்:

"என் பாடலை ஏற்று மகிழ்ந்த அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே! என் இறைவரே! திருப்பள்ளியிலிருந்து எழுந்து வந்து எனக்குப் பேரருள் புரிய வேண்டும்" என்று வள்ளலார் மனம் கசிந்து உருகப் பிரார்த்திக்கிறார்.

## 6

ஒருமையின் உலகெலாம் ஓங்குக எனவே
ஊதின சின்னங்கள்; ஊதின சங்கம்;
பெருமைகொள் சமரச சுத்தசன் மார்க்கப்
பெரும்புகழ் பேசினர்; பெரியவர் சூழ்ந்தார்;
அருமையும் எளிமையும் ஆகிஅன்ருகி
அம்பலத் தேசித்தி ஆடல்செய் பதியே!
இருமையும் அளித்தஎன் அருட்பெருஞ் ஜோதி!
என்அர சே! பள்ளி எழுந்தருள் வாயே!

வானைக் கிழித்துக்கொண்டு "ஊம்! ஊம்!" என்று திருச்சின்னங்கள் ஓங்கி ஒலித்தன.

"ஓம்! ஓம்!" என்று வெண்சங்குகள் முழங்கின:

இந்தத் திருச்சின்னங்களின் ஊங்கார ஒலிகளும் வெண்சங்குகளின் ஓங்கார நாதங்களும் மக்களைத் தட்டி எழுப்பின. அவர்கள் மனதைக் கவர்ந்தன. அவர்களுக்குள் ஒருமையை உண்டாக்கின.

எல்லாம் பிரணவமாகிய 'ஓம்' என்னும் அருட்சக்தியின் மயமாகவே விளங்குகின்றன. உள்ளத்துள் ஓங்காரமாயிருக்கும் அருட்சக்தியின் அம்சமே நாம் ஒவ்வொருவரும். எனவே நாம் எல்லோரும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை உடைய சகோதரர்களே ஆவோம். இந்த உண்மையைத்தான் பிரணவ நாதம் நமக்கு உணர்த்துகிறது.

மக்கள் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை நன்கு உணர்ந்துகொள்ள வேண்டும்.

எல்லாரும் உள்ளும் புறமும் ஒத்து உரிமை உடையவர்களாய் வாழ்ந்து தழைத்து ஓங்கவேண்டும் என்று அந்தப் பிரணவ நாதம் கட்டளையிடுகிறது. சுத்த சன்மார்க்கப் பெரியவர்கள் அந்த சன்மார்க்கத்தின் பெருமையைப் பேசுகிறார்கள் என்று ஓங்கார முழக்கம் தெரிவிக்கிறது.

மக்களைத் துன்பத்தில் ஆழ்த்தி அவர்களைச் சீர்குலைத்து வந்த மற்ற மார்க்கங்களைப்பற்றி அவர்கள் பேசவில்லை.

சுத்த சன்மார்க்கம் மற்ற சன்மார்க்கத்திலிருந்து வேறுபட்டதுஎன்பதை முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். அப்போதுதான் அதன் உயர்வையும், தனிச்சிறப்பையும் நன்கு தெரிந்து கொள்ளமுடியும்.

சன்மார்க்கம் என்றால் பொதுவாக அறநெறி; நல்வழி என்று பொருள் கொள்ளலாம்.

அறநெறிகளும், நல்வழிகளும் பொய்யான போக வாழ்க்கையில் ஈடுபடும் மனதைத் திருத்தி அதை இறை அனுபவத்தை நோக்கிச் செலுத்துவதற்காகவே ஏற்பட்டன.

இந்த நெறிகளால் மக்கள், அழிவைத்தரும் உலகியல் தொடர்பை அறுத்துக் கொள்ள முடியவில்லை. அவரவர்கள் விரும்பியதை நிறைவேற்றிக்கொள்வதற்குத்தான் அந்த நெறிகள் ஓரளவு பயன்பட்டன. அந்த சன்மார்க்கங்களால் பெரும் நன்மை ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை.

கடவுள் அனுபவமான பேரின்பத்தைப் பெறுவதற்கே நம் உடம்பு பயன் பெறவேண்டும். ஓங்கார தத்துவ நிறைவை உடையது மனிதனின் புனித உடல்.

இந்த உடல் அழியாமல் நிலைத்து இருந்தால்தான் பேரின்பப் பெருவாழ்வைப் பெற முடியும்.

கடவுள் நித்தியமானவர். அவர் உடலின் உள் இருக்கும் ஆன்ம வடிவை மட்டும் பற்றிக்கொண்டுவிடுவாரானால் உடல்

உயிர் அற்று வீழ்ந்துவிடும். அந்த உடலைப் பெற்றிருந்த ஆன்மாவின் ஆனந்த அனுபவமும் அத்தோடு முடிந்துபோய் விடும். ஆன்மா மட்டும் கடவுளுடன் கலந்து போய்விடும்.

இதுவரை எத்தனையோ ஆன்மாக்கள் இவ்வாறு தங்கள் புனித உடலைப் பூமியிலே கிடத்திவிட்டுக் கடவுளுடன் கலந்து போயிருக்கின்றன.

ஆன்மா தம் உடலைவிட்டுப் பிரிந்து போவதால் அந்த ஆன்மா தம் உடல் உடன் இருந்து அனுபவித்து வந்த பேரின்ப நிலையையும் இழந்துவிடுகிறது. இதைத்தான் ஜீவன்முத்தி நிலை என்று சைவசித்தாந்தம் சொல்கிறது!

இது எப்படி ஜீவன் முத்தி நிலையாகும்? இது தேகத்தை இழந்த விதேக நிலை அல்லவா? தேகத்தை இழந்த நிலையே விதேக நிலையாகும். உடலை விட்டுவிட்ட ஆன்மா, உடல் இல்லாமலே பேரின்பத்தைப் பெற்றுவிட்டது என்று சைவசித்தாந்தம் பேசுகிறது.

இது எப்படி நியாயமாகும்?

ஆன்மாவும், உடலும் சேர்ந்து இருக்கும்போதுதான் பேரின்பத்தை அனுபவிக்க முடியும் என்பதை, சுத்த சன் மார்க்கம் தெளிவாகத் தெரிவிக்கிறது.

இப்போது சுத்த சன்மார்க்கத்தைப்பற்றித் தெரிந்து கொள்வோம்.

கடவுள் ஒருவரே. அவர் அருட்பெருஞ் ஜோதியாய்த் தனிப்பெருங்கருணையுடன் இருப்பவர். இதை விளக்கிக் காட்டுவதுதான் சுத்த சன்மார்க்கம்.

அருட்பெருஞ் ஜோதியை நடுவில் வைத்து, அதைச் சுற்றி ஓர் உடல் உருவம் தோன்றும்படி அதன் தனிப்பெருங் கருணை செய்து வருகிறது.

அந்த உயிரின் உடலுக்கு அதன் அதன் தன்மைக்கு ஏற்ப அனுபவங்களைக் கொடுத்து அதை மேல் நிலைக்கு உயர்த்திக்கொண்டு இருக்கிறது.

ஒவ்வொரு உடலில் இருக்கும் உயிரையும் இயக்கிக்கொண்டிருப்பவர் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர். அவர் நித்தியமானவர். ஒவ்வொரு உயிருக்கும் அருள்ஞானம் உண்டாக்கும் கருவியாகவே அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணை அந்த உயிர்களுக்கு உடலைக் கொடுத்திருக்கிறது.

உயிருக்குள் இருக்கும் இறைவனை எண்ணித் தியானிக்கும் ஒருவன் அந்த இறைவனுடன் ஒன்றுவதற்காகத் தன் உடலை விட்டுவிடுவது பேரின்ப வாழ்வாகாது.

ஒவ்வொருவரும் அருட்பெருஞ்ஜோதி இல்லாமல், தான் இல்லை என்பதை உணர வேண்டும். அதன் தனிப்பெருங் கருணையாகிய ஜீவர்களிடம் தயவு காட்டுவதை ஒவ்வொருவரும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

தங்கள் உயிர், உடல், சிந்தனை, சொல், செயல் முதலிலவற்றில் எல்லாம் அருட்பெருஞ்ஜோதியை நிறைத்துக் கொள்ளவேண்டும்.

அப்போது நம் உள் இருந்து ஆள்கின்ற அருட்பெருஞ் ஜோதியின் தயவே அங்கிருந்து அனகமுற விரிந்து எல்லாவற்றையும் தன் வண்ணமாக ஆக்கிக்கொள்கிறது. அந்த ஆன்மாவின் உடல் அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணை மயமாகவே மாறிவிடுகிறது.

இந்த நிலையில் அந்த உடம்பு சுத்த உடம்பாகிவிடுகிறது. இந்தச் சுத்த உடம்பில் கடவுள் நித்தியத் தன்மையுடன் நிலைபெற்று இருக்கிறார். அந்த உடம்பையும் நித்தியத் தன்மை உடையதாய்ச் செய்கிறார்.

நம் உள் இருக்கும் இறைவனை உணர்ந்து அவர் அருளுடன் அனகமுற வாழ்கின்ற பேரின்பப்பெரு வாழ்வுதான் சுத்த சன்மார்க்கம். சுத்த சன்மார்க்கத்தில் ஒருவன் தன் தூல உடம்பை இழப்பதில்லை.

ஒருவன் செய்கின்ற அருட்பணி காரணமாக அருட் பெருஞ் ஜோதியின் தனிப்பெருங்கருணை, அவன் தூல உடம் பில் இருக்கும் ஒவ்வொரு உயிர் அணுவிலும் புகுந்து பரவு கிறது. இதன் மூலமாக அந்தத் தூல உடம்பின் அசுத்தம் நீங்கிவிடுகிறது. அது சுத்த உடல் ஆகிறது; மரணம் இல் லாத நித்தியத் தன்மையைப் பெற்றுவிடுகிறது.

உடம்பின் உள்ளே இருக்கும் அருட்சோதியே அனக மாக விரிந்து உடம்பின் ஒவ்வொரு உயிர் அணுவிலும் நிறை வதால், அந்த உடம்பு அருள் ஒளி உடம்பாக மாறிவிடுகிறது. இந்த நிலையில்தான் ஒருவன் இறைவனின் பேரின்ப அனு பவத்தைப் பெறுகிறான்; மரணமிலாப் பெருவாழ்வை அடை கிறான். இதுதான் சுத்த சன்மார்க்கத்தின் தனிப்பெருமை.

இந்த உண்மையை நன்றாக அறிந்த சுத்த சன்மார்க்கி கள் இதன் புகழையே பேசிக்கொண்டு இருக்கிறார்கள். சுத்த சன்மார்க்கத்தின் பெருமையை அறிந்து கொண்ட பெரியோர்கள் வேறு கற்பனை மார்க்கங்களின் கதைகளைப் பேசி வீண்பொழுது போக்க மாட்டார்கள்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் அம்பலத்தில் சித் தாடல் புரிந்துகொண்டிருக்கிறார். அவர் அருமையும், எளிமை யும் இவை இரண்டும் அல்லாத நிலைமையும் உடையவர்.

உயிர்ப்பணி செய்து வருவதன் மூலமாகத்தான் ஒருவர் தன்னிடம் இருக்கும் அகங்காரத்தைப் போக்கிக்கொள்ள முடியும். அகங்காரத்தைப் போக்கிக்கொண்டவர்களுக்கு ஆண்டவன் அருள் எளிதாகக் கிடைக்கிறது.

இவர்களுக்கு இறைவன் எளிமையாக இருக்கிறார்.

உயிர்ப்பணி புரியாமலும், இரக்க உணர்வு இல்லாமலும்; கருணை இதயம் பெறாமலும், வெறும் கல்வித் திறமையைக் காட்டும் ஆணவமுடையவர்களுக்கு இறைவன் அருள் கிடைப்பது அருமையாகும்.

இவர்களுக்கு ஆண்டவன் அருமையாக இருக்கிறார்.

உயிர்ப்பணி புரியாமலும், அதே சமயத்தில் கல்வித் திறமை இல்லாமலும் இருக்கும் சாதாரண மக்களுக்கு இறைவன் எங்கும் இருக்கின்றவராகவும் இருக்கிறுர். அவர் களால் காணமுடியாதவராகவும் இருக்கிறுர். ஆத்திகர்க்கு அவர் இருக்கின்றவராகவும், நாத்திகர்க்கு அவர் இல்லாத வராகவும் இருக்கிறுர். பொதுமக்களுக்கோ இறைவன் இந்த இரண்டும் இல்லாத மத்திய நிலையில் இருக்கிறுர்.

அருட்பெருஞ்ஜோதி அரசே' எனக்கு இருமையையும் அளிந்திருக்கிறீர்கள். எனக்குத் தந்திருக்கின்ற இந்த இரு மையின் பெருமையை யார் அறிவார்?

இந்தப் பிறவியை இம்மை என்றும், மறுபிறவியை மறுமை என்றும் சித்தாந்திகள் சொல்வார்கள்.

எனக்கு இப் பிறவியிலேயே இறப்பும், பிறப்பும் இல்லாத பெருவாழ்வான மறுமையை அல்லவா தந்திருக்கிறீர்கள்.

சைவ சித்தாந்திகள் சொல்கிற இம்மை மறுமை என்ற இருமையில் என்ன பெருமை இருக்கிறது?

சித்தாந்திகள் கருத்துப்படி இம்மை நீங்கினுல் அல்லவா மறுமை என ஒன்று வந்து அடைய வாய்ப்பு இருக்கும்? இப் பிறவி போனுல் அல்லவா மறுபிறவி ஏற்பட முடியும்?

என் தூல உடல்தான் அழியாத நித்திய உடலாக மாறிவிட்டதே. எனக்குப் பேரின்ப பெரு வாழ்வையே அல் லவா அளித்திருக்கிறீர்கள். நான் பெற்றிருக்கும்இந்த இருமை சுத்த சன்மார்க்க இருமை ஆயிற்றே. சைவ சித்தாந்திகள் கூறும் இப்பிறவியையும் மறு பிறவியையும் குறிக்கும் அழி வைத்தரும் இருமை அல்லவே.

சுத்த சன்மார்க்க இருமை அருள்மை, பொருள்மை என்ற நிலையான இருமையை உடையது ஆயிற்றே.

அருள்மைப் பேற்றினுல் எல்லாப் பொருள்களையும் ஆளும் பொருள்மைப் பேற்றையும் பெற்றிருக்கிறேன்,

இந்த நிலையான இருமையை எனக்கு அளித்து உலகை எல்லாம் வாழ்வித்து ஆளும் அருளையும் தந்திருக்கிறீர்கள். வாழ்க தங்கள் தனிப்பெருங்கருணை!

சுத்த சன்மார்க்கத்தின் நிலையான இருமையை எனக்கு வழங்கியதுடன் என் திருப்பள்ளியில் இருந்தும் எழுந்து இருக்கிறீர்கள். தேவரீர் அனகமுற்று என்னை ஆண்டருள வேண்டும் என்பதே அடியேன் விண்ணப்பமாகும்.

# 7

சினைப்பள்ளித் தாமங்கள் கொணர்ந்தனர்; அடியார்
சிவசிவ போற்றிஎன்று உவகைகொள்கின்றார்
நினைப்பள்ளி உண்ணத்தெள் ஆரமு தளிக்கும்
நேரம்இந் நேரம்என்று ஆரியர் புகன்றார்
முனைப்பள்ளி பயிற்றுதுஎன் தனைக்கல்வி பயிற்றி
முழுதுணர் வித்துஉடல் பழுதெலாம் தவிர்த்தே
எனைப்பள்ளி எழுப்பிய அருட்பெருஞ் ஜோதி
என்அப்பனே! பள்ளி எழுந்தருள்வாயே!

அருளையே விரும்புகின்ற அடியார்கள் அகமும் புறமும் தூய்மையை உடையவர்கள். அவர்கள் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் ஆலயத்தின் முன்னால் வந்து நிற்கிறார்கள்

அவர்கள் வெறுங்கையுடன் வரவில்லை. தம் கரங்களில் கட்டவிழும் நிலையில் இருக்கும் பெரிய மொட்டுகளால் ஆன பூமாலைகளுடன் வந்து நிற்கிறார்கள்.

இந்த மாலைகள் திருப்பள்ளியிலிருந்து எழுந்தருளும் தெய்வத்துக்கே உரிய மாலைகள்.

கைகளில் பூமாலையைத் தாங்கி நிற்கின்ற அவர்கள் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்திருக்கின்றன.

தம் திருவாய் மலர்ந்து ஆண்டவனை 'சிவசிவ' என்று வணங்கிப் போற்றுகிறார்கள். அவர்கள் உள்ளங்களில் உவகை பொங்கித் ததும்புகிறது.

அடியார்கள் இறைவன் பெருமையைப் போற்றும் இந்த அமுத வேளையில் இறைவன் அருளாற்றலை அள்ளி அள்ளிப் பருகிக்கொண்டிருக்கும் ஒழுக்கம் நிறைந்த சான்றோர்களும் ஆலயத்தின் முன் நிற்கிறார்கள்.

ஆண்டவனின் அருளைப்பற்றி எண்ணி எண்ணி அதன் மூலம் உடம்பில் அமுது ஊறச் செய்யும் நேரம் அல்லவா இந்த நேரம் என்று சொல்கிறார்கள்:

(''நி னை ப் ப ள் ளி யு ண் ண'' என்பதை ''நினைப்பு, அள்ளி, உண்ண'' என்று பொருள் கொள்ளவேண்டும்.)

போராட்டங்களே நிறைந்துள்ள சாதாரணப் பள்ளிக் கூடத்தில் என்னைக் கல்வி பயிலச் செய்யாமல் அருளையே ஆதாரமாகக் கொண்ட எல்லாக் கல்வியையும் எனக்குக் கற்பித்தீர்கள். என் சிரநடுவில் தாங்கள் எழுந்தருளியிருக்கும் சிற்றம்பலமே எனக்கு உண்மையான கல்வி கற்பிக்கும் பள்ளிக் கூடமாக விளங்கியது.

பள்ளி என்ற சொல்லும், அருளை ஆதாரமாகக் கொண்ட கல்வியே உண்மையான கல்வி என்பதையும் குறிக்கிறது.

ஒவ்வொருவர் தலையிலும் ஓங்கார மூளையின் சிகரம் 'ப' என்ற வடிவில் இருக்கிறது.

'ள்' என்ற எழுத்து தமிழ் மெய் எழுத்து வரிசையில் பதினாறுவது எழுத்து. இது பதினாறு கலைகளும் நிரம்பிய முழு நிலவைக் குறிக்கும். இது பதினாறு நிலைகளையும் கடந்து சென்ற முழு அனுபவத்தை குறிக்கும்.

'ளி' என்ற எழுத்து, அருள் நிரம்பிய ஆராய்ச்சியால் தான் பதினாறு நிலைகளையும் கடந்து முழு அனுபவம் அடைய முடியும் என்று சுட்டுகிறது. 'ள்' என்ற எழுத்தும் 'இ' என்ற எழுத்தும் சேர்ந்து 'ளி' என்று ஆகிறது. 'இ' என்ற எழுத்தை அருள் பிரணவம் என்று சொல்வார்கள்.

அருள் அனுபவ ஞானத்தைப் பயில்விக்கும் இடம்தான் பள்ளி. இந்தப் பள்ளியில் ஒருமையுடன் இருந்து தயவுடன் கனிகின்றபோது அருள் அனுபவப் பூரண ஞானம் வெளிப்

படுகிறது, இதுவே என் திருப்பள்ளியில் இருந்து தங்கள் திருவருளால் நான் பெற்ற கல்வியாகும்.

அருளை ஆராய்ந்து அதை வெளிப்படச் செய்வதுதான் கல்வி. இதுதான் சாகாத கல்வி என்பதையும் தெரிந்து கொண்டேன். சாதாரணப் பள்ளிக் கூடங்களில் இந்தக் கல்வியை எங்கே கற்றுத் தருகிறுர்கள்?

அருள் உண்மை விளங்காத, மருள் மயக்கமே கொள்ளச் செய்யும் விகார உணர்ச்சியை அல்லவா கல்வி என்ற பெயரில் கற்றுக்கொடுக்கிறுர்கள்.

எனக்குச் சாகாக் கல்வியை அளித்து அருளியிருக்கிறீர்கள். இந்தக் கல்வியில் நான் பூரணஞானம் பெற்று முழுத் தேர்ச்சி அடையும்படி செய்திருக்கிறீர்கள். இந்தக் கல்வியால் என் உடல் பழுதெலாம் போய்விட்டது. இத்தேகத்தின் தத்துவக் கேடுகள் எல்லாம் நீங்கி விட்டன. இவ்வுடலில் உள்ள உயிர் அனுக்களில் அருள் ஒளியை நிரப்பி, இந்த உடலையே சுத்த தேகமாகச் செய்துவிட்டீர் கள்.

என்னையே நான் அறிந்து கொள்ளாமல் என் உள்ளே உறங்கிக் கிடந்தேன். அப்படி உறங்கிக் கிடந்த என்னைப் பள்ளியிலிருந்து எழுப்பி எனக்குப் பூரண அருள் ஞானக் கல்வியைக் கற்பித்தீர்கள். இந்த அருள் ஞானக் கல்வியில் பூரணமாக நான் தேர்ச்சி பெறவும் செய்துவிட்டீர்கள்.

என் அப்பனே! தாங்கள் திருப்பள்ளியிலிருந்து எழுந்து வரவேண்டும்.இவ்வுலகத்து மக்கள் எல்லாம் இந்தப் பேருண்மையை உணர்ந்து கொள்ளும்படி செய்யக் கூடிய சக்தியைப் பெற எனக்கு அனக அருள் பாலித்தல் வேண்டும்.

கற்றுரும், கல்லாதவரும் மற்று எல்லாரும் தங்களை உணர்ந்து உய்வுபெறும்படிச் செய்யும் ஆற்றல் எனக்கு ஏற்படக் கருணை புரியவேண்டும்.

# 8

மதம்பிடித் தவரெல்லாம் வாய்பிடிப் புண்டு
வந்துநிற் கின்றனர் வாய்திறப் பிப்பான்;
கதம்பிடித் தவரெல்லாம் கடும்பிணி யாலே
கலங்கினர்; சூழ்ந்தனர்; உலம்புறு கின்ருர்;
பதம்பிடித் தவரெல்லாப் அம்பலப் பாட்டே
பாடினர் ஆடினர்; பரவிநிற் கின்ருர்
இதம்பிடித்து எனையாண்ட அருட்பெருஞ் ஜோதி!
என்னைய னே!பள்ளி எழுந்தருள் வாயே!

பலர் பல மதங்களைப் பின்பற்றுகிருர்கள். அவர்கள் எல்லாம் தங்கள் தங்கள் தெய்வங்களும் மதக்கொள்கை களும்தான் உயர்வானவை; சரியானவை என்று முழக்கம் செய்கிருர்கள். மதவெறி பிடித்து அலைகிருர்கள்.

இதனுல் அவர்கள் எந்தப் பயனும் அடையவில்லை. தங்கள் மதங்களையும் தெய்வங்களையும் பற்றிப் பேசியதால் அவர்களுக்குள் மதச் சண்டைகளும் பூசல்களும்தான் ஏற்படு கின்றன. இதை எண்ணி என்ன செய்வது என்று தெரி யாமல் திகைத்து நிற்கிருர்கள். வாய் திறந்து பேச முடி யாமல் ஊமையர்களைப் போல் நிற்கிருர்கள்.

அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் பிணக்குகளால் மிகுந்த துன்பம் அடைந்திருக்கிருர்கள். அந்தக் கவலையால் துவண்டு இருக்கிருர்கள். இந்தத் துன்பத்திலிருந்தும்

கவலையிலிருந்தும் மீள முடியுமா? அமைதி பெற முடியுமா? தங்கள் கவலையைப் போக்கி மனதில் அமைதி ஏற்பட யாராவது வாய்திறந்து வழிசொல்ல மாட்டார்களா? கடவுளைப் பற்றிய உண்மையை உணர்த்த மாட்டார்களா? என்பதைத் தெரிந்துகொள்வதற்காக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் சந்நிதியில் வந்து நிற்கிறார்கள்.

அகச்சமயம், புறச்சமயம் என்று வகுக்கப்பட்டிருக்கும் ஆறு சமயத்தவர்களும் மற்ற புறப்புறச் சமயத்தவர்களும் உண்மையான இறைவன் யார் என்று புரிந்துகொள்ள முடியாமல் தவிக்கிறார்கள். உண்மையான இறைவனை அறிந்துகொண்டு பெருவாழ்வு பெறுவதற்காக அருட்பெருஞ் ஜோதி ஆண்டவன் சந்நிதியில் வந்து ஆவலுடன் நிற்கிறார்கள்.

மதம் என்பது மருள் நெறியில் செல்வது அல்ல. அருள் நெறியில் செல்வதுதான் என்று அவர்களுக்குப் புரிகிறது. மதம் என்பது அறிவின் அமுதமாகும். அது மெய்ஞ்ஞானமாகிய அருளமுதம். இந்த உண்மையை உணர்கிறார்கள்.

தங்கள் தங்கள் தெய்வங்களும் மதங்களும்தான் பெரியன என்று எண்ணி வந்த மௌடீகம் அவர்களை விட்டு விலகுகிறது. இனி அவர்கள் மருள் மதத்தைப் பின் பற்றமாட்டார்கள். அருள் மதம் ஒன்றே சிறந்த மதம் என்பதை உணர்ந்து உய்வு பெறுவார்கள்.

இறைவன் ஒருவனே என்ற உண்மையை உணர்ந்து கொள்ளாததனால்தான் மதவாதிகள் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்கிறார்கள். மக்கள் மத்தியில் கலகத்தைத் தூண்டிவிடுகிறார்கள். இவர்களைத்தான் வள்ளலார் மதம் பிடித்தவர்கள் என்கின்றார்.

மதம் பிடித்தவர்கள் கதம் பிடித்தவர்களாகவும் இருக்கிறார்கள். கதம் என்பது உள்ளக் கொதிப்பை ஏற்படுத்தும் கோபம். இதனால் இதயத்துடிப்பு அதிகரிக்கிறது. இரத்தம் சூடேறுகிறது. உடலில் கனல் வீசுகிறது. கண்கள் சிவக்கின்றன. புருவங்கள் நெரித்து மேலேறுகின்றன. உதடுகள்

துடிதுடிக்கின்றன. பற்கள் நறநறவென்று கடிக்கின்றன. அழகிய முகம் விகாரமடைகிறது. உடல் நடுக்கமுறுகிறது.

இவைகள் எல்லாம் கதம் பிடித்தவர்களுக்கு ஏற்படும் கடும்பிணியைக் காட்டுவனவாகும். இதனுல் பல்வகையான நோய்கள் அவர்களுக்கு ஏற்படுகின்றன. கலக்கம் உறு கிருர்கள். என்ன செய்து இதிலிருந்து மீளலாம் என்று எண்ணுகிருர்கள். ஒரு வழியும் புரியாமல் தவிக்கிருர்கள். மனம் போனபடி எல்லாம் உளறுகிருர்கள்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் திருவடிகளை உறுதி யாகப் பற்றியவர்கள் உத்தமர்கள். இவர்களே பதம் பிடித்த வர்கள். இவர்கள் அம்பலப்பாட்டைப் பாடிக்கொண்டிருக் கிருர்கள். அம்பலப்பாட்டே என்பது சிரநடுவில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் பெருமையைப் பாடிப் பரவும் பாடலாகும். அம்பலப்பாட்டே அருள் பாட்டு. அல்லாத பாட்டு எல்லாம் மருள் பாட்டு. சிதம்பரப்பாட்டே திருப்பாட்டு. சீவர்கள் பாட்டெல்லாம் தெருப்பாட்டு.

அடியார்கள் எல்லாம் அருட்பாடலைப்பாடி ஆனந்தக் கூத்தாடித் தொழுது நிற்கிருர்கள். ஆடுவதும் பாடுவதும் என்பது கைத்தாளம் போட்டுக்கொண்டு தாளம் தவருமல் கூத்தாடுவது அல்ல. ஆருயிர்களுக்குத் தயா உணர்ச்சி யுடன் தொண்டு செய்வது ஆடுவதாகும். ஆருயிர்களிடம் அன்பு மொழிகளைப் புகன்று அவைகளை இன்புறச் செய்து தாமும் இன்புறுவது பாடுவதாகும்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே! தாங்கள் பள்ளியில் இருந்து எழுந்து வரவேண்டும். தாங்கள் அருள் புரிந்து கொண்டிருப்பதை நான் உணரவேண்டும். தங்களுடன் நானும் ஒன்றியிருக்கவேண்டும். அந்த இணைப்பில் ஏற்படும் பூரண இன்பத்தில் திளைக்கவேண்டும்.

என் ஐயனே! தாங்கள் இன்ப வண்ணமாக என் நெஞ் சில் நிறைந்திருக்கிறீர்கள். என்னை ஆட்கொண்டிருக்கிறீர் கள். என் நெஞ்சில் வேறு எதுவும் புகுந்துவிடாமல் காத்து

நிற்கிறீர்கள். வீணாக நான் வேறுஎதையும் எண்ண முடியா மலும் செய்துவருகிறீர்கள்.

தாங்கள் என் இதயத்தில் இருப்பது மட்டும் போதாது. என் சிரநடுவில் இருக்கும் திருப்பள்ளியில் இருந்து தாங்கள் எழவேண்டும். அங்கிருந்து அனகமாக விரிந்து என் உடம் பிலும் உடம்பின் ஒவ்வொரு உயிர் அணுவிலும் உயிரிலும் பரவி என்னை ஆண்டருள வேண்டுகிறேன்.

இதம் என்ற சொல் இனிமை, பக்குவம், நன்மை, பொருத்தம் என்ற பொருள்களை எல்லாம் தரக்கூடியது. இதம் இறைவனின் திருவடிகளைப் பற்றிக் கொள்ளும் பக்கு வம் ஆகிறது. என் நெஞ்சத்திலே வந்து பொருந்தி நிலை கொள்கிறது. எல்லையில்லாப் பேரின்பத்தைக் கொடுக் கிறது. இதம் பிடித்துத் தாங்கள் என்னை ஆட்கொண்டு அருளுகிற விதம் என்ன அற்புதம்!

# 9

மருளொடு மாயைபோய்த் தொலைந்தது; மதங்கள்
வாய்மூடிக் கொண்டன; மலர்ந்தது கமலம்;
அருள்ஒளி விளங்கிய து;ஒருதிருச் சபையும்
அலங்கரிக்கின்றனர்; துலங்கி வீற்றிருக்கத்
தெருளொடு பொருளும்மேன் மேல்எனக்கு அளித்துச்
சித்தெலாஞ் செய்திடத் திருவருள் புரிந்தே
இருளறுத்து எனையாண்ட அருட்பெருஞ் ஜோதி!
என்வள்ள லே!பள்ளி எழுந்தருள் வாயே!

என் அகத்தில் அருட்பெரும் ஜோதி எழுந்தது. ஒன்றை மற்றொன்றாகத் தோன்றும்படிச் செய்துகொண்டிருந்த மருள் இருளான மாயை என்னிடமிருந்து மறைந்து போய்விட்டது

இதுவரையில் என் உடம்பையும், உலகத்தையும், அவற்றின் பொருள்களையும் செயல்களையும் மாயை என்று எண்ணி மயங்கிக் கிடந்தேன்.

என் உள்ளே, அருள் ஒளி தோன்றியதும், அந்த அருள் ஒளியே மாயையாக இருந்து என்னை ஊக்கி உணர்வுபெறச் செய்திருக்கிறது என்பதை இப்போது புரிந்துகொண்டேன்.

சூரியன் உதயமாகிறது. தாமரை மலர்கிறது. இதுவரை மலர்ந்திருந்த குமுதம் வாய் மூடிக்கொள்கிறது.

இந்தக் காட்சி அருள் ஒளியால் உள்ளத் தாமரை மலர்வதைக் காட்டுகிறது. மருள் மயக்கமுடையவர்களின் குமுத வாய் அடைபட்டுப் போவதையும் உணர்த்துகிறது.

இந்தக் குமுத மலரில் நீல நிறமுள்ள குமுத மலர்களும் உண்டு. நீலக்குமுத மலரும் சூரியஉதயத்தில் அதன் பொன் ஒளிபட்டவுடன் வாய் மூடிக்கொள்ளும். இது மருள் மயக்க முள்ளவர்கள் அருள் ஆற்றல் உள்ளவர்கள் முன்னுல் பேச்சு அற்று வாய் மூடிக்கொண்டிருப்பதைக் காட்டுகிறது.

பல்வகைச் சமயங்களைப் பற்றியும் வாய் கிழியப் பேசிக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் வாய் மூடிக்கொண்டுவிட்டார் கள். மதங்களின் குமுத வாய்களும் குவிந்துவிட்டன; மூடிக்கொண்டுவிட்டன.

தங்கள் உள்ளத்தில் இருக்கும் ஞானசபையில் அருட் பெருஞ் ஜோதியைக் கண்டவர்கள்; அதையே வெளியில் எல்லாரும் கண்டுகொள்ளும்படி அழகிய சத்திய ஞான சபை யைத் தோற்றுவிக்கிருர்கள். அதில் அருட்பெருஞ் ஜோதியை எழுந்தருளச் செய்கிருர்கள். அருட்பெருட் ஜோதி எழுந்தருளும் அழகிய சத்திய ஞானசபையை மேலும் மேலும் அழகுபடுத்தி ஆனந்தம் அடைகிருர்கள்.

தங்கள் தங்களிடம் இருக்கும் சத்திய ஞானசபையை உணர்கிருர்கள். அதில் எழுந்தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதியை வழிபட்டு அற்புத சித்திகள் எல்லாம் பெறக் கூடிய சுத்த சன்மார்க்க அன்பர்கள் கூட்டம் பெருகவேண்டும் என்பதற்காகவே சத்திய ஞானசபையை அழகுபடுத்தி ஆனந்தமடைகிருர்கள்.

என் அகத்தில் உள்ள சத்திய ஞானசபையில் எழுந் தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே! எனக்கு ஞான அனுபவத் தெளிவையும் மெய்ப் பொருளையும் வழங்கி அருளியிருக்கிறீர்கள். இதனுல் அருட்சித்திகள் பலவற்றை யும் நான் அடையும்படிச் செய்திருக்கிறீர்கள்.

பேரருளை எனக்குக் கொடுத்து அதனுல் என்னிடமிருந்த பேரிருளைப் போக்கிய அருட்பெரும் ஜோதி வள்ளலே! தாங்கள் திருப்பள்ளியில் இருந்து எழுந்து வந்து என்னுடன்

பரிபூரணமாக ஒன்றி நின்று அனகமாக விரிந்து அருட்சித்து ஆடிக்கொண்டிருத்தல் வேண்டும்.

உலக மக்கள் எல்லாம் தங்களை அறிந்து, தங்களுடன் ஒன்றி, தங்களை அனுபவித்துப் பேரின்பம் பெற்று மகிழ்வதற்கு அனகமாக விரிந்து உதவுதல் வேண்டும்.

# 10

அலங்கரிக் கின்றோம்ஓர் திருச்சபை;அதிலே
அமர்ந்துஅருட் ஜோதிகொண்டு, அடிச்சிறி யோமை
வலம்பெறும் இறவாத வாழ்வில்வைத் திடவே
வாழ்த்துகின்றோம்; முன்னர் வணங்கிநிற் கின்றோம்
விலங்கியது இருளெலாம்; விடிந்தது பொழுது;
விரைந்துஎமக்கு அருளுதல் வேண்டும்;இத் தருணம்
இலங்குநல் தருணம்,எம் அருட்பெருஞ் ஜோதி!
எம்தந்தை யே!பள்ளி எழுந்தருள் வாயே!

இப் பாடல் கூட்டுப் பிரார்த்தனையாக இருக்கிறது.

நாங்கள் மிகச் சிறியவர்களாகிய அடியவர்கள். தங்கள் திருவருள் ஆற்றலால் இந்தச் சத்திய ஞானத் திருச்சபையை அலங்கரித்துக் கொண்டிருக்கிறோம். இந்த ஞானசபையின் பீடத்தில் எழுந்தருளி எங்களை வாழ்விக்கவேண்டும்.

தங்கள் சந்நிதியில் வணங்கி நிற்கிறோம். எங்களை மரணமிலாப் பெரு வாழ்வில் வாழும்படிச் செய்யவேண்டும்.

''வலம்பெறும் இறவா வாழ்வு'' என்றால் அருள் ஆற்றல் நிரம்பிய மரணமிலாப் பெருவாழ்வு என்று பொருள். வலம் பெறும் என்றால் ஆற்றல் நிரம்பும் என்பதே பொருள்.

இந்த உண்மையை நாங்கள் அறிந்துகொள்ள முடியா மல் மருள் இருளில் மூழ்கிக் கிடந்தோம். அந்த மருள் இருள் விலகி மறைந்தது. பொழுது விடிந்தது. எங்களுக்கு அருள்

பாலித்திடவேண்டும். தாங்கள் எங்களுக்கு அருள் புரிவதற்கு இது நல்ல தருணம்.

அருட்பெருஞ் ஜோதித் தந்தையே! எங்கள் ஒவ்வொருவருடைய உள்ளமாகிய பள்ளியில் இருந்து எழுந்து வந்து, அகத்தும் புறத்தும் அசையாமலிருந்து நிலையான ஆனந்த வாழ்வை அருளும்படி வேண்டுகிறோம்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் ஒருவரே. அவரே பரிபூரணமானவர். அவர் ஒவ்வொரு அணுவிலும், ஒவ்வொரு உயிரிலும், பரிபூரணமான அருளாற்றலோடு ஓங்கி விளங்கிக் கொண்டிருக்கிறார்.

இந்த உண்மை இன்றைய அருளற்றவிஞ்ஞான அறிவுக்கு விளங்குவதில்லை. அருள் மயமான மெய்ஞ்ஞான அறிவுக்கே தெளிவாகத் தெரிகிறது.

அருளற்ற பகுத்தறிவு நிலையை முதலில் ஆன்மா கடக்கிறது. அருள்மயமாகத் தன்னைத்தான் உணர்ந்து நிற்கிறது. அப்போது அந்த ஆன்மா தன்னுள் தானாக இருக்கும் அருட்பெருஞ் ஜோதியைக் கண்டு அனுபவித்து இன்புற்று மகிழ்ந்து கொண்டிருக்கிறது.

உயிருக்கு உயிராக இறைவன் ஏன் இருக்கிறார்? அந்த அந்த உயிருக்கு அருள் அனுபவம் கொடுப்பதற்காகவே இருக்கிறார். அருள் அனுபவம் கொடுத்து ஒவ்வொரு உயிரையும் வளரச் செய்வதால் அருட்பெருஞ் ஜோதியை "எங்கள் தந்தை! எங்கள் தந்தை!" என்று அருளாளர்கள் அழைத்து இன்புற்று மகிழ்கிறார்கள்.

தாங்கள் எங்கள் உள்ளமாகிய திருப்பள்ளியில் எழுந்தருளி இருப்பதை அறிந்து மகிழ்கிறோம். தாங்கள் இனி எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் எங்களை விட்டு நீங்காது இருந்து அருளவேண்டும். எங்களை அனக வாழ்வில் எப்போதும் நிலைத்து இருக்கும்படிச் செய்ய வேண்டும். இந்த வேண்டுகோளை நாங்கள் தனித்தனியாகவும் ஒன்று சேர்ந்தும் வேண்டிக்கொள்கிறோம்.

அருட்பெருஞ் ஜோதியை உள்ளத்தில் எழுந்தருளச் செய்வது ஒருவகைத் திருப்பள்ளி எழுச்சி.

இது ஞான சன்மார்க்கம்.

உள்ளத்தில் எழுந்தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதியை அங்கிருந்து அனகமாக விரிந்திடச் செய்வது மற்ருெரு வகைத் திருப்பள்ளியெழுச்சி.

இது சுத்த சன்மார்க்கம்.

அனக வாழ்வு பெறும் திருப்பள்ளி எழுச்சிதான் ஒவ்வொருவருக்கும் முழுப்பயனையும் தருகிற திருப்பள்ளி எழுச்சி ஆகும். முதல் முதலில் இந்தப் பெரும்பயனைப் பெற்றுக் கொண்டவர் திருவருட் பிரகாச வள்ளலார்.

அவர் மூலமாக உலகத்தில் வாழும் ஒவ்வொருவரும் இத் திருப்பள்ளி எழுச்சியின் பெரும் பயனைப் பெற்றுக்கொள்ளப் போகிருர்கள். பெற்றுக் கொண்டும் வருகிருர்கள். இது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் திருவுள்ளம்.

இந்த உண்மையை அறிந்துகொள்ளாமல் வெறும் பக்தி யுள்ளத்தோடு மட்டும் திருப்பள்ளியெழுச்சி பாடலைப் பாடி ஆடி பரவசப்பட்டுப் போய்விடுவதாலே மட்டும் திருவருட் பெருநலம் கிடைத்துவிடாது. இது கிடைக்காதவரை பிறவிச் சூழலை விட்டு விலகவே முடியாது.

எனவே இந்தப் பிறவியிலேயே எல்லாரும் மரண மிலாப் பெருவாழ்வைப் பெறுவதையே குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். இதை அடைவதற்கு அருள் நெறியில் வாழவேண்டும். இப்படி வாழ்வதுதான் சுத்த சன்மார்க்கத் திருப்பள்ளி எழுச்சியின் நோக்கமாகும்.

# பற்று அறுத்தல்

பற்று அறுத்தல் என்றால் என்ன?

திருஅருட்பிரகாச வள்ளலார் திருப்பள்ளி எழுச்சியை அடைந்ததும் தமக்கே உரியவை என்று எண்ணியிருந்த தம் உடல், பொருள், ஆவி என்ற மூன்றையும் இறைவனிடம் சமர்ப்பித்துவிட்டார். அவற்றின் மீது தமக்கு இருந்த பற்றை அறுத்துக்கொண்டார்.

உயிர்களுக்குத் தாம் தொண்டாற்று வதற்காகவே உடல், பொருள், ஆவி மூன்றும் இறைவனால் தமக்கு வழங்கப்பட்டவை என்பதைத் தமக்குக் கிடைத்த திருப்பள்ளி எழுச்சியினால் உணர்ந்துகொண்டார்.

எனவே இம்மூன்றையும் பரிபூரண சரணாகதியாக இறைவனிடமே ஒப்புவித்துவிட்டார்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் பற்று ஒன்றையே உறுதியாகப் பற்றிக்கொண்டார்.

அதனால் அவர் பெற்ற பேரின்ப அனுபவத்தைப் 'பற்று அறுத்தல்' என்ற இந்தப் பதிகத்தில் அனுபவித்துப் பாடி இருக்கிறார். தாம் பெற்ற பேரின்பத்தை மற்றவர்களும் பெறும்படி இப்பதிகத்தில் விளக்கிக் கூறி இருக்கிறார்.

உயிர்களிடத்தில் வள்ளலார் வைத்திருக்கும் எல்லையற்ற கருணைதான் அவரைப் பேரின்பம் பெறும் நிலைக்கு; மரண மிலாப் பெருவாழ்வு நிலைக்கு உயர்த்தி இருக்கிறது.

# 1

சத்தியம் சத்தியம் அருட்பெருஞ் ஜோதித்
தந்தைய ரே! எனைத் தாங்குகின் றீரே!
உத்தமம் ஆகும்நும் திருச்சமு கத்துஎன்
உடல்பொருள் ஆவியை உவப்புடன் அளித்தேன்!
இத்தகை உலகிடை அவைக்கும்என் தனக்கும்
ஏதும் சுதந்திரம் இல்லையிங்கு இனிநீர்
எத்தகை ஆயினும் செய்துகொள் கிற்பீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே! என்னைப் பள்ளியில் இருந்து எழுப்பி இருக்கிறீர்கள். இப்போது என் உடல் பொருள் ஆவி எல்லாம் உயிர்ப்பணி செய்வதற்காகவே எனக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன என்ற உண்மையை உணர்ந்துகொண்டேன்.

இதன் மூலமாக சத்திய ஞான ஆனந்தமாகிய உண்மை இன்பத்தை எனக்கு அருளி இருக்கிறீர்கள்.

இந்தப் பேரின்ப நிலையைப் பெற்று விளங்குகிற அடியேனுக்கு, இனி என்ன குறை?

இந்த உலகத்தில் சர்வ சுதந்திரராக விளங்கும் தேவரீருடைய திருச்சமுகத்திலே என் உடல், பொருள், ஆவி மூன்றையும் மகிழ்ச்சியுடன் சமர்ப்பித்து நிற்கிறேன்.

அருட்பெருஞ் ஜோதித் தந்தையாராகிய தேவரீர் அடியேனைத் தாங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். இது சத்தியம்!

தேவரீரால் எனக்கு வழங்கியுள்ள உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றிலும் அடியேனுக்கு இனிச்சிறிதும் சுதந்திரம் இல்லை. இனி, தேவரீர் என்னை என்ன செய்ய விரும்புகிறீர்களோ அப்படியே செய்துகொள்ளுங்கள்.

சர்வ சுதந்திரராகிய அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரிடம் தம்மை முழுவதுமாக வள்ளலார் சமர்ப்பித்துக்கொண்டார். திருப்பள்ளியில் இருந்து எழுந்துவிட்டார். அதனுல் பரிபூரண ஆனந்தத்தைப் பெற்று இருக்கிறுர். இந்த ஆனந்தத்தைத் தாமே அனுபவித்துக் கொண்டிருக்காமல் எல்லா உயிர்களும் அனுபவிக்கும்படி அனகமாக விரிந்து அவைகளுக்குத் தொண்டாற்றிக் கொண்டிருக்கிறுர்.

அனக வாழ்வைப் பெற்ற வள்ளலார் முன்பு இருந்த வள்ளலாராக இல்லை. அருட்பெருஞ் ஜோதி ஆண்டவராகவே இயங்கிக்கொண்டிருக்கிறுர்.

நாமும் அருட்பெரும் ஜோதி மய வாழ்வைப் பெறுவோம். அருட்பெரும் ஜோதியினிடம் அடைக்கலம் புகுவோம்.

நம் உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் நாம் என்று எண்ணிக்கொண்டு இருப்பதைவிட்டுவிட்டு, அருட்பெரும் ஜோதியாகவே இருந்து பணிபுரிவோம்.

நம் அகத்தில் இருக்கும் அருள் செயல் அனகமாக விரிந்து செயல்படுவதை உணர்ந்து மகிழ்வோம்.

இறைவனின் திருவுள்ளப்படியே எல்லா செயல்களும் நடக்கட்டும். முத்தேக சித்தியால் கிடைக்கும் சுத்த சுகானந்த வாழ்வை நமக்கு வழங்கி நம்மை இறைவன் வாழ்விப்பார். இது சத்தியம்.

## 2

ஆணையும் ஆணையென் அருட்பெருஞ் ஜோதி
ஆண்டவரே! திரு அம்பலத் தவரே!
நாணைவிட்டு உரைக்கின்ற வாறுஇது கண்டீர்!
நாயக ரே!உமை நான்விட மாட்டேன்!
கோணைஎன் உடல்பொருள் ஆவியும் நுமக்கே
கொடுத்தனன் இனிஎன்மேல் குறைசொல்ல
வேண்டாம்
ஏணை நின்று எடுத்தகைப் பிள்ளை நான் அன்றே!
எனைப்பள்ளி எழுப்பிமெய் யின்பம்தந் தீரே!

அருட்பெரும் ஜோதி நாயகரே! தங்களிடம் என் வெட்கத்தை விட்டுச் சொல்கிறேன்.

சன்மார்க்கத்தில் செல்லாமல் கோணல் மாணலாகப் போய்க்கொண்டிருந்த என் உடல் பொருள் ஆவி மூன்றையும் தங்களிடம் சமர்ப்பித்துவிட்டேன்.

இனி என்மீது குறை ஒன்றும் சொல்லாதீர்கள். ‘‘உன்னை கயில் பிள்ளை உனக்கே அடைக்கலம்’’ என்பதுபோல தங்களுக்கு நான் தொட்டிலில் இருந்து எடுத்த கைக் குழந்தை போன்றவன்தானே.

என்னைத் திருப்பள்ளியில் இருந்து எழுப்பிப் பேரின்பத்தையும் அளித்து வருகிறீர்கள். உங்கள் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். இனி தங்களை விடமாட்டேன்.

# 3

அகத்தொன்று புறத்தொன்று நினைத்ததுஇங் கில்லை
அருட்பெரும் ஜோதிஎன் ஆண்டவ ரே! நீர்
சகத்தென்றும் எங்கணும் சாட்சியாய் நின்றீர்!
தனிப்பெருந் தேவரீர் திருச்சமு கத்தே
உகத்தெனது உடல்பொருள் ஆவியை நுமக்கே
ஒருமையின் அளித்தனன்; இருமையும் பெற்றேன்
இகத்தன்றிப் பரத்தினும் எனக்கோர் பற்றிலைகாண்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பம்தந் தீரே!

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே! தங்கள் சமூகத்தில் உள் ஒன்று வைத்து, புறம் ஒன்று பேச நான் நினைத்தது இல்லை. இதைத் தாங்களே அறிவீர்கள்.

தாங்கள் இந்த உலகில் என்றும் எப்பொருளிலும் சாட்சியாக இருக்கிறீர்கள்.

தனிப்பெரும் தலைவராகிய தங்கள் சமுகத்தில் என் உடல் பொருள் ஆவி மூன்றையும் மகிழ்ச்சியுடன் ஒருமையில் கொடுத்தேன். இப்பிறவியிலேயே கொடுத்தேன்.

இதனால் பொருள்மை, அருள்மையாகிய இருமையையும் பெற்றுக் கொண்டேன்.

தாங்கள் என்னைத் திருப்பள்ளியில் இருந்து எழுப்பி பேரின்பத்தைக் கொடுத்திருக்கிறீர்கள்.

இவ்வுலகத்திலும் மற்ற உலகங்களிலும் நான் பற்றிக் கொள்ளத்தக்கது, தங்களை அன்றி வேறு ஒன்றும் இல்லை.

## 4

தப்படி எடுத்துக்கொண்டு உலகவர் போல
சாற்றிடமாட்டேன் நான் சத்தியம் சொன்னேன்
செப்படி வித்தைசெய் சித்தர்என்று ஓதும்
தேவரீர் வல்லபத் திருச்சமுகத்தே
இப்படி வான்முதல் எங்கணும் அறிய
என்னுடல் ஆதியை ஈந்தனன் உமக்கே!
எப்படி ஆயினும் செய்துகொள் கிற்பீர்!
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பம்தந் தீரே!

தாங்கள்தான் எல்லாம்வல்ல சித்தர்.

தேவரீர் திருச் சமுகத்தில் எப்படி வேண்டுமானலும் வாழும் உலகத்தவர் பேசுவதுபோல நான் பேசவில்லை.

உள்ளும் புறமும் ஒத்த நிலையில் இருந்து முழு உண்மையைப் பேசுகிறேன்.

மற்றவர் களைப் போல செப்படி வித்தைகளிலும் ஜால வித்தைகளிலும் வீண்காலம் போக்குபவன் அல்ல நான்.

என் உடல் பொருள் ஆவியை இவ் உலகமும் வான் உலகமும் அறியும்படித் தங்களிடமே ஒப்புவித்துவிட்டேன்.

தாங்களும் திருப்பள்ளியில் இருந்து என்னை எழுப்பி எனக்குப் பேரின்பம் வழங்கி வருகிறீர்கள்!

தாங்கள் இனித் தங்கள் விருப்பம்போல் என்னை எப்படி வேண்டுமானலும் செய்துகொள்ளுங்கள்.

# 5

தருணத்துக் கேற்றவா சொல்லிப்பின் மாற்றும்
தப்புரை ஈதன்று சத்தியம் சொன்னேன்;
கருணைப் பெருக்கினில் கலந்துஎனது உள்ளே
கனவினும் நனவினும் களிப்பருள் கின்றீர்!
வருணப் பொதுவிலும் மாசமுகத்து என்
வண்பொருள் ஆதியை நண்பொடு கொடுத்தேன்;
இருள்நச்சு அறுத்துஅமு தம்தர வல்லீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பம்தந் தீரே!

பொன்னம்பலத்தில் எழுந்தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே!

தங்கள் மகா சந்நிதானத்திலே என் போகப்பொருள் முழுவதையும் என் தேகத்தையும் என் வாழ்வையும் மனம் ஒப்பி தோழமை உணர்வுடன் கொடுத்து விட்டேன்.

தேவரீர் அடியேனைப் பள்ளியெழுப்பி பரமானந்தத்தை அருளியிருக்கிறீர்கள்.

என் அகத்திலும் புறத்திலும் சூழ்ந்திருந்த இருளாகிய நஞ்சைப் போக்கி அருள் ஜோதி அமுதத்தையே எனக்கு அளித்திருக்கிறீர்கள்.

எனக்கு உரியனவற்றையெல்லாம் தங்களுக்கே உரியன வாகச் செய்துவிட்டேன். இது சத்தியம்.

நான் சமயத்துக்கு ஏற்றபடி பேசுபவன் அல்ல.

சத்தியமாகச் சொல்கிறேன். தேவரீர் பெருங்கருணை யால் என்னுள் கலந்து பிரியாமல் இருந்து கனவிலும் நனவிலும் இன்பம் அளித்துக்கொண்டிருக்கிறீர்கள்.

# 6

வாய்மட்டிற் சொல்கின்ற வார்த்தைஅன்று இது; என்
மனம்ஒத்துச் சொல்லிய வாய்மை முக்காலும்;
தாய்மட்டி லன்றிஎன் தந்தையும் குருவும்
சாமியும்ஆகிய தனிப்பெருந் தகையீர்!
ஆய்மட்டில் என்னுடல் ஆதியை நுமக்கே
அன்புடன் கொடுத்தனன் ஆண்டவரே! நீர்
ஏய்மட்டில் எப்படி யேனும்செய் கிற்பீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

அருட்பெரும் ஜோதி ஆண்டவரே! நான் உள்ளத்தில் ஒன்றும் உதட்டில் ஒன்றுமாகச் சொல்லவில்லை. மனதாரச் சொல்கிறேன். இது எக்காலத்திலும் உண்மையாகும்.

தாங்களே எனக்குத் தாயும் தந்தையும் குருவும், தெய்வமும் ஆவீர்கள். எனவே என்னுடையவை, எனது, நான் என்று எண்ணியிருந்த உடல், பொருள், ஆவி மூன்றையும் தங்கள் உடைமையே என்று நன்கு உணர்ந்து தங்களுக்கே அன்புடன் அளித்துவிட்டேன்.

தேவரீர் எப்படிச் செய்துகொள்ள விரும்புகிறீர்களோ, அப்படியே இவற்றைச் செய்துகொள்ளலாம்.

என்னை விழிப்படையும்படிச் செய்து இன்பம் தந்து வருகிறீர்கள். இந்த இன்பத்தில் இருந்துகொண்டே நான் அனகமாக விரிந்து இன்பம் பெற்று ஓங்கவேண்டும் என்பதுதான் தங்கள் திருவுள்ளம்போலும்.

தித்திக்கப் பேசிக் கசப்புள்ளே காட்டும்
    திருட்டுப்பேச்சு அன்றுநும் திருவுளம் அறியும்
எத்திக்கும் அறியஎன் உடல்பொருள் ஆவி
    என்பவை மூன்றும்உள் அன்பொடு கொடுத்தேன்
சித்திக்கும் மூலத்தைத் தெளிவித்துஎன் உள்ளே
    திருநடஞ் செய்கின்ற தேவரீர் தாமே
இத்திக்கில் எப்படி யேனும்செய் கிற்பீர்!
    எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந்தீரே!

அருட்பெரும் ஜோதி ஆண்டவரே!

இவ்வுலகத்தார், நெஞ்சில் நஞ்சும் வாயில் தேனுமாகப் பேசுவார்கள். புன்முறுவலை வெளியில் காட்டி மிக இனிமையாகப் பேசுவார்கள். அவர்கள் மனத்திலோ வெறுப்பும் பழிப்பும் மறைந்து கிடக்கும்.

இப்படிப் பேசுவது திருட்டுப் பேச்சாகும்.

எனது பேச்சு அப்படிப்பட்டது அல்ல. இதைத் தங்கள் திருவுள்ளமே நன்கு அறியும்.

எத்திசையில் உள்ளோரும் அறியும்படியாக, அடியேன் என் உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் அன்போடு, தங்களுக்குக் கொடுத்துவிட்டேன்.

தாங்களும் இவற்றை உவந்து ஏற்றுக்கொண்டு என்னைத் திருப்பள்ளியில் இருந்து எழுப்பிவிட்டீர்கள். நான் பேரின்பமும் அனுபவிக்கும்படி செய்து வருகிறீர்கள்.

எல்லா சித்திகளுக்கும் அடிப்படையான உண்மை எது என்று நான் உணரும்படி எனக்குத் தெளிவூட்டிக் கொண்டு திருநடம் புரிந்து வருகிறீர்கள்.

தங்கள் விருப்பம் எப்படியோ அப்படியே என்னை ஆக்கிக்கொள்ளுங்கள்.

# 8

புன்மார்க்கத்து உள்ளும் புறத்தும் வேருகிப்
புகன்றசொல் அன்றுநும் பொன்னடி கண்ட
சன்மார்க்க சங்கத்துச் சாதுக்கள் காணச்
சத்தியம் சத்தியம் சத்தியம் சொன்னேன்;
தன்மார்க்கத்து என்னுடல் ஆதியை நுமக்கே
தந்தனன் திருவருட் சந்நிதி முன்னே;
என்மார்க்கத்து எப்படி யேனுஞ்செய் கிற்பீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே!

புன்மார்க்கம் என்பது, சிறுநெறி. பண்படாத மனம் முதலிய கரணங்களை உடைய சமய வாதிகளும், அருள் உண்மையை உள்ளவாறு கண்டறியாதசித்தர்களும் தோற்று வித்த எந்த ஒரு நெறியும் சிறு நெறியே ஆகும்.

இந்தச்சிறு நெறியில் பயின்றவர்கள் உள்ளத்தில் உண்மையை முழுமையாகப் பற்றிக்கொள்வதில்லை.

அதனுல் அவர்களால் உள்ளதை உள்ளபடி சொல்ல முடிவதில்லை. அவர்கள் உள்ளொன்றும், புறத்தொன்று மாக மனம்போனபடி பேசுகிருர்கள்.

அவர்கள் பேசுவது முன்னுக்குப் பின் முரணுகவே அர்த்தமில்லாமல் இருக்கும்.

நான் புன்மார்க்கத்தவர் போல் பேசுபவன் அல்ல.

என்சொல்லையும் அதற்கு உரிய பொருளையும், தங்களு டைய பொன்னுர் திருவடிகளைக் கண்டுகொண்ட அடியார்

களும், சன்மார்க்க சங்கத்து அன்பர்களும் உண்மை என்று ஏற்றுக்கொள்கிருர்கள். நான் சொல்லுவது சத்தியமானது என்பதையும் அவர்கள் உணர்கிருர்கள்.

அருள் மயமான தங்கள் மார்க்கத்திலேயே இயங்கும்படி என் உடல் பொருள் ஆவி மூன்றையும் தங்கள் திருவருள் சந்நிதியில் வைத்து, தங்களுக்கே அர்பணித்துவிட்டேன்.

தாங்களும் அடியேனைப் பள்ளியெழச் செய்தருளி நான் பேரின்பத்தைப் பெறும்படி செய்துகொண்டிருக்கிறீர்கள்.

இனிமேல் தாங்கள் அனக வாழ்வில் என்னை வைத்து எப்படி வேண்டுமானுலும் ஆண்டு கொள்ளவேண்டுகிறேன்.

# 9

இச்சைவேறு இல்லைஇங்கு என்கருத் தெல்லாம்
என்னுள் அமர்ந்து அறிந்தேஇருக் கின்றீர்;
விச்சை எலாம்வல்ல நும்திருச் சமுக
விண்ணப்பம்; என்னுடல் ஆதியை நுமக்கே
நிச்சலும் தந்தனன் என்வசம் இன்றி
நின்றனன்; என்றனை நீர்செய்வ தெல்லாம்
எச்செயல் ஆயினும் செய்துகொள் கிற்பீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே!

அடியேன் முற்றிலும் தங்களுக்கு ஆட்பட்டுவிட்டேன்.

ஆகையால் இனி என்னுடைய ஆசை என்று எதுவும் என்னிடம் தனியே இருப்பதற்கில்லை.

என்னுள்ளேயே இருக்கும் தங்களுக்கு நான் இதைத் தெரிவிக்க வேண்டுமா?

தாங்களே எல்லாம் அறிந்திருக்கிறீர்கள். மந்திரம், ஞானம், சித்து முதலிய வித்தைகளில் எல்லாம் வல்லவர் தாங்கள். தங்கள் சந்நிதியில் அடியேன் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன்.

என்னுடைய உடல், பொருள், ஆவி மூன்றையும் தங்களுக்குச் சர்வ சுதந்திரமாகத் தந்துவிட்டேன்.

அதனால் பரவசப்பட்டு நிற்கிறேன்.

இனி என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள். அது தங்கள் இஷ்டம்.

அடியேனைப் பள்ளியில் இருந்து எழுப்பி இருக்கிறீர்கள். நான் அகமிருந்து விரிந்து அனக ஆனந்தம் பெற்று நித்தியமாய் விளங்குகிறேன்.

இதுவும் தங்கள் திருவுள்ளச் செயல்தான்.

# 10

மன்செய்து கொண்டசன் மார்க்கத்தில் இங்கே
வான்செய்து கொண்டது நான்செய்து கொண்டேன்
முன்செய்து கொண்டதும் இங்ஙனம் கண்டீர்!
மூவகை யாம்உடல் ஆதியை நுமது
பொன்செய்து கொண்ட பொதுவினில் ஆடும்
பொன்னடி காணப் பொருந்திக் கொடுத்தேன்
என்செய்து கொண்டாலும் செய்துகொள் கிற்பீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

இந்த உலகம் இயற்கை உண்மை விளக்கமாகத் திகழ்கிறது. இதில் நடைபெறும் எல்லாச் செயல்களும், ஜீவ தயவு அடிப்படையில்தான் நடைபெற்று வருகின்றன.

உயிர்களின் இயற்கை உண்மை இன்ப வாழ்வுக்காகவே இவைகள் நடைபெற்று வருகின்றன.

இதுதான் சுத்த சன்மார்க்கம்.

இது தெய்வத்தின் இயக்கமாகப் புறத்தேயும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதைத்தான் மன்செய்து கொண்ட சன்மார்க்கம் என்றார் வள்ளலார்.

மன் என்றால் எல்லாவற்றுக்கும் மன்னனாகிய இறைவனைக் குறிக்கும். இந்த இறைவன் நம் சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்தில் சிறப்பாக விளங்கி இருக்கிறான்.

இந்த ஆன்ம உண்மை விளக்கத்தைக் கொண்டு, அடியேன் ஒரு நெறியை அமைத்துக்கொண்டேன்.

இந்த உண்மையைத் தெரிந்துகொள்ளாத பருவத்தும், போதிய அறிவு இல்லாத காலத்தும்கூட சன்மார்க்கத்தையே பின்பற்றி வந்திருக்கிறேன்.

நான் இப்போது சுத்த சன்மார்க்கத்தில் வளர்ந்து பக்குவப்பட்டிருக்கிறேன்.

இந்த நெறியின்படி அருட்பெரும் ஜோதி ஆண்டவனுகிய தங்களிடம் அடைக்கலம் புகுந்து இருக்கிறேன்.

என் உடல் பொருள் ஆவி மூன்றையும், பொன்னம்பலத்தில், திருநடனம் புரிகின்ற தங்கள் பொன்னர் திருவடிக்கே அடைக் கலமாகக் கொடுத்து விட்டேன்.

இப்படிக் கொடுத்தவுடன் தாங்களும் அடியேனை என் உள்ளப் பள்ளியில் இருந்து எழுப்பி இருக்கிறீர்கள். என்றும் அழியாத நித்திய இன்பத்தையும் அருளி இருக்கிறீர்கள்.

இனி தங்கள் விருப்பப்படி என்னை என்ன வேண்டுமானுலும் செய்துகொள்ளுங்கள்.

நான் என்று எனக்கு ஒரு அகப்பற்று இருந்தால் தானே எனது என்று ஒரு புறப்பற்றும் இருக்க முடியும்!

அப்படியொன்றும் இல்லை.

ஆகையால் தங்கள் திருவுள்ளம் அடியேன் பாக்கியம்.

# 11

தெய்வங்கள் பலபல சிந்தைசெய் வாரும்
சேர்கதி பலபல செப்புகின் றாரும்
பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்
பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்
மெய்வந்த திருவருள் விளக்கம் ஒன்றில்லார்
மேல்விளைவு அறிகிலர் வீண்கழிக் கின்றார்
எய்வந்த துன்புழித் துஅவர்க்கு அறிவு அருள்வீர்!
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே!

அடியேனைத் திருப்பள்ளியில் இருந்து எழுப்பி மெய்யான இன்பத்தை அருளிய அருட்பெருஞ் ஜோதிக் கடவுளே!

இந்த உலகத்தில் உள்ள மக்கள் பலவகையான தெய்வங்களை வழிபட்டு வருகிறார்கள். அவர் அவர் அடைகின்ற தெய்விகப் பேறுகளும் பலவகையாக இருக்கின்றன.

கடவுள் உண்மையை உணர்த்தாத புறக்கவர்ச்சிகள் மிகுந்த கற்பனை உருவங்களையே கடவுளாக அமைத்து வழிபட்டுவருகிறார்கள். காரணம் அவர்களுக்குத் திருஅருளின் உண்மை சிறிதும் விளங்கவில்லை.

இதனால் மருளில் மயங்கி உழல்கிறார்கள்.

சமய, மத வாதிகளின் கற்பனைகளிலேயே மனதைப் பரிபூரணமாகப் பறிகொடுத்து வருகிறார்கள். அவைகளையே பாராட்டுகிறார்கள்.

அந்தோ! இவர்கள் எல்லாம் உண்மையான திருவருள் விளக்கத்தை அறிந்து கொள்ளாதவர்களாக இருக்கிறார்களே!

திருவருளால் ஏற்படும் விளைவுகள் என்ன என்பதைஎண்ணிப் பாராது காலங்கழித்துக் கொண்டிருக்கிறார்களே!

இவர்கள் அறிவைத் தூண்டி தங்கள் திருவருளால் இவர்களையும் ஆட்கொண்டு, இவர்கள் அடைந்துவரும் துன்பங்களை எல்லாம் ஒழித்து அருளவேண்டும்.

என்னைத் திருப்பள்ளியில் இருந்து எழச்செய்து, எனக்கு அருளியதுபோலவே, இவர்களுக்கும் அழிவில்லாத இன்பத்தை அளித்து அருள வேண்டும்.

இது எனது தாழ்மையான விண்ணப்பம்.

இவ்வுலகில் உள்ள ஒவ்வொருவரும் என்னைப் போலவே திருப்பள்ளியில் இருந்து எழுந்திருந்து பேரின்பப் பெரு வாழ்வு வாழ வேண்டும் என்ற குற்றமற்ற ஜீவ தயவு காரணமாகவே தங்கள் திருச்சந்நிதியில் இருந்து விண்ணப் பித்துக்கொள்கிறேன்.

அருட்பெரும்ஜோதி ஆண்டவரே, அடியேன் முழுமை யாகத் தங்களுக்கு அடைக்கலம்.

# கடவுள் ஒருவரே

நினைவுக்கும் அறிவுக்கும் எட்டாத காலத்தில் இருந்தே என்றும் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஆண்டவர் ஒருவர்தான். அவர் பரிபூரணமானவர்.

அவர்தான் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். அவர் தனிப்பெருங் கருணையோடு விளங்கி வருபவர்.

இந்த ஆண்டவரை எங்கு, எப்படிக் காண்பது?

வெளியில் நாம் காணும் பொருள்களில் இதுதான் இறைவன் என்று எதைச் சுட்டிக் காட்டுவது?

காணும் பொருள்களுக்குள் எல்லாம் கடவுள் இருந்தாலும் அவை கடவுள் வடிவங்கள்தானு என்ருல், இல்லை என்றுதான் சொல்லுவார்கள்.

கடவுள் வடிவங்களில் நாம் காண்பவை எல்லாம் கடவுளின் ஒரு பகுதிதான் என்று சொன்னுலும் அதையும் எல்லோராலும் ஏற்றுக்கொள்ள முடியாது.

ஆனுல் கடவுளின் தன்மையையும், செயலையும் எல்லாப் பொருள்களிலும் காணக்கூடிய ஞானிகளும் இருக்கிருர்கள். அவர்கள் அருள்நெறிப் பயிற்சிபெற்ற அருளாளர்கள்.

அருள்நெறிப் பயிற்சி இல்லாத சாதாரண மக்களால் வெளியில் உள்ள பொருள்களில் மட்டும் அல்ல; அகத்தில் உள்ள பொருள்களிலும் இறைவனைக் காண முடியாது.

இதனால் இறைவன் அகத்திலும் இல்லை, புறத்திலும் இல்லை என்று சொல்லிவிட முடியுமா? முடியாது.

குருடனுக்குச் சூரியனும் தெரிவதில்லை. அதன் ஒளியும் தெரிவதில்லை, அதனால் சூரியனும் இல்லை அதற்கு ஒளியும் இல்லை என்று ஆகிவிடுமா?

இறைவன் எங்கும் எதிலும் இருப்பது உண்மைதான். இருந்தாலும் அவர் ஒவ்வொரு உயிரிலும் அருள் ஒளி அணு வடிவத்தில் சிறப்பாக இருக்கிறார்.

அருள் ஒளி அணு அழிவதில்லை. அழியா அருள் ஒளி அணு, தான் அழியாமல் இருப்பதுடன் தன்னுடன் மற்ற அணுக்களைச் சேர்த்துக்கொண்டு பல்வகைப் பொருள்களாக உருவம் பெற்றுத் திகழ்கிறது.

ஒவ்வொரு அணுக்கருவிலும் ஒரு மகத்தான சக்தி இருக்கிறது. இந்தச் சக்தியையாவது இறைவன் என்று சொல்லலாமா? சொல்ல முடியாது.

இன்றைய விஞ்ஞான உலகம் அணுக்கருவில் இருக்கும் சக்தியை ஆராய்ந்து பார்த்து அதை வெற்றிகரமாகப் பயன் படுத்தியும் வருகிறது. அணு சக்தியின் ஆற்றல் அபரிமிதமானதுதான். என்றாலும் இந்தச் சக்தியே முழுவதும் இறைவன் என்று சொல்ல முடியாது.

அணு சக்தியை முன் மாதிரியாகக் கொண்டு அருள் நெறிப் பயிற்சியின் மூலமாக இறைவன் உண்மையைக் காணலாம் என்பது சன்மார்க்க ஞானிகளின் அனுபவம்.

ஒவ்வொரு அணுவுக்கும் அணுக்கரு உண்டு. இந்த அணுக்கருவுக்கு ஒரு நிலையான ஆற்றலும் உண்டு. இந்த நிலையான ஆற்றலால் அந்த அணு, தன்னை நிலையாக இருத்திக் கொள்வதுடன், தன் இன அணுக்களையும் சேர்த்துக்கொண்டு ஒரு தனிப் பொருளாக விளங்குகிறது.

உதாரணத்துக்கு ஒரு தங்கத்துண்டை எடுத்துக்கொள்வோம், அதில் பல தங்க அணுக்கள் கூடியிருப்பதைக்

காணலாம். அந்தத் தங்க அணு ஒவ்வொன்றும் ஒரேவித சக்தியை உடையது.

இத்தகைய குறிப்பிட்ட சக்தியை உடைய பல தங்க அணுத்திரள்கள்சேர்ந்து, ஒரு தங்கத் துண்டாக உருப் பெற்றிருப்பதை அறியலாம்.

ஒரு குறிப்பிட்ட அணுச்சக்தியே தங்க அணுவாகும் இயல்பு பெற்றிருக்கிறது.

இது மேலே சொன்ன தங்கபூத அணுக்கருவின் சக்திக் குள்சக்தியாக இருந்து என்றும் விளங்கிக் கொண் டிருக்கிறது. இந்த அருள் ஒளி அணுவே இறைவன்.

இது இல்லாத பொருளும், உயிரும் இல்லை. இந்த அருள் ஒளி அணுவைத்தான் 'ஆன்மா' என்கின்றனர்.

இந்த அருள் ஒளி அணு தான் கடவுட் குணம் முற்றிலும் நிரம்பப்பெற்று அணுவுக்குள் அணுவாக இருப்பது. இந்த இறை உண்மையை நம்முன்னுல் இருக்கும் பெரிய பிரபஞ்ச மும் அதில் இடைவிடாமல் நடைபெற்று வரும் ஐந்தொழில் செயல்களும் காட்டிக்கொண்டிருக்கின்றன.

எல்லாம்வல்ல சக்தியை உடையவர் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர். அவர் தனிப் பெருங் கருணையோடு செயல்பட்டு வருகிருர். அவர் ஒவ்வொரு அணுவுக்குள் அணுவாய் இருப்பது போலவே, ஒவ்வொரு உயிருக்குள் உயிராகவும் இருக்கிருர். பரிபூரணமாகவும் இருக்கிருர்.

ஒவ்வொரு அணுவுக்குள்ளும் அணுக்கருவாகவும், ஒவ்வொரு உயிருக்குள்ளும் உயிரின் உயிராகவும் அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர் இருந்தாலும், அவர் பல ஆண்ட வர் அல்லர்; அவர் ஒருவர்தான்.

சின்னஞ்சிறு அணுக்களுக்குள் அணுவாகவும், உயிருக் குள் உயிராகவும் இருக்கும் அந்த ஒருவர் எப்படி எங்கும் எதிலும் எல்லாமுமாய் இருக்க முடியும்?

இதுதான் இறைவனின் எல்லாம்வல்ல அருட்பெருஞ் சக்தியின் பெருமையாகும்.

இந்த அருட்சித்தால்தான் இறைவன் ஒவ்வொரு உயிருக்குள் உயிராகவும் ஒவ்வொரு அணுவுக்குள் அணுவாகவும் பரிபூரணமாக நிரம்பி இருக்கிறார்.

இந்தப் பேருண்மையைப் புரிந்துகொள்ளும் அறிவை ஒருவர் பெறும்போதுதான் அவருக்கு இறைவனைப்பற்றிய முழு உண்மையும் விளங்கும்.

உயிருக்குள் உயிராக இருக்கும் அருள்ஒளியே இறைவன். அவர் தன்னை நமக்குத் தெரிவிப்பதற்காகத் தன் பெருங் கருணையால் தன்னைச் சூழ ஒரு உடம்பை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார்.

அவ்வாறு இறைவனால் உருவாக்கப்பட்ட ஒவ்வொரு உடம்பிலும் அதன் உயிருக்கு உயிராக அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் இருக்கிறார். அவருடைய அருளால்தான் ஒவ்வொரு உயிரும் அறிவு விளக்கம் பெற்றுக்கொள்கிறது. இந்த அறிவு படிப்படியாக வளர்ச்சிபெற வேண்டும்.

இதற்கு ஓரறிவு உடைய உயிர் முதல் ஆறறிவுடைய உயிர் வரையிலுள்ள எல்லா உயிர்களுக்கும் அந்த அந்த உயிர்களுக்கு ஏற்ற உடம்புகளையும் அருட்பெருஞ் ஜோதி உருவாக்குகிறது.

ஆறறிவு பெற்ற நமது உடலில்தான், நமது உயிருக்குள் உயிராக விளங்கும் அருட்பெருஞ் ஜோதி பூரணத்துவம் பெற்று இருக்கிறது. நமது உயிருக்குள் உயிராக இருந்து ஆறு அறிவையும் நிறைவுபெறச் செய்கிறது.

இந்த நிலையில் அருட்பெருஞ் ஜோதியின் அருளே நமது அறிவுக்கு அறிவாக விளங்குகிறது.

அருட்பெருஞ் ஜோதியை, மெய் அறிவுக் கடவுளை நாம் காணும்படியும் கண்டு அனுபவிக்கும்படியும் செய்கிறது.

உண்மையில் நித்தியமாகவும், சத்தியமாகவும் இருப் பது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர்தான். அவர்தான் பரி பூரணமாக உள்ள ஒரே கடவுள் ஆவார்.

அவர் பூத அணுக்களிலும், அப்பூத அணுச் சேர்க்கை யால் தோன்றிய பொருள்களிலும் மறைந்திருக்கின்ருர்.

அருள்நெறி அறிவும் அனுபவமும் பெருத உடம்புகளில் அவர் வெறும் உயிராக மட்டும் இருக்கிருர். இந்த உடம்பு களால் வெறும்புலன் அறிவுதான் வளர்கிறது. அருள் நெறிப் பயிற்சியின் மூலமாக அருள் அனுபவம்ஏற்படும்போது தான் ஒருவன் தன்னைத்தான் கண்டுகொள்ள முடிகிறது.

அருள் ஞானம் பெற்றவர் கண்களுக்கே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் காணப்படுகிருர். அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே அவருடைய அருளால் நம் அறிவைத் தூண்டி அதன் மூலமாக அவரையே அறிந்து கொள்ளவும் செய்கிருர்.

அப்போது நமது புலன்களின் மீதுள்ள இச்சையை மறந்து அருள் ஒளி அணுவின் தூல வடிவம்தான் நமது உடம்பு என்பதை உணர்கிருேம்.

இந்த உணர்வு நிறைவுபெறும் வரையில் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே நம் உயிருக்குள் உயிராக இருந்து நாம் பல பிறவிகளை எடுக்கும்படிச் செய்து வருகிருர்.

பிறப்பு இறப்பு என்னும் தொடர் ஒரு விதியின் முறைப் படி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

இறைவன் வேறு நாம் வேறு என்ற பேதம் நீங்கி நம் அருள் அறிவு பூரணத்துவம் பெறும்போது நாமும் இறைவ னும் ஒன்ருகிவிடுகிருேம்.

இந்நிலையில் அருள் ஒளி அணுதான் நம் உயிருக்குள் உயிராக இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் என்ப தையும் அறிந்துகொள்கிருேம்.

நம்முள் இருந்து நம்மை இயக்கிக்கொண்டிருப்பவர் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்.

அவர் தம் தனிப்பெருந் தயவு காரணமாக எல்லாக் காலத்திலும் இடைவிடாமல் இருந்து வருகிறுர்.

எல்லாப் பொருள்களுக்கு உள்ளும் இருந்து வருகிறுர். ஐந்தொழிலால் தம்மைத் தாமே வெளிப்படுத்திக் கொண்டும் வருகிறுர் என்ற உண்மையையும் உணருகிறேம்.

இறைவர் ஒருவரே. அவர்தான் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். அவர் எங்கும் நிறைந்து இருக்கிறுர். எல்லாப் பொருள்களிலும் அந்த அந்தப் பொருள்களுக்கு உள்ளேயும் இருக்கிறுர். ஒவ்வொரு பொருளின் வடிவங்களும் அதன் செயல்களும், அனுபவங்களும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரைக் காண்பதற்காகவே அவருடைய அருளால் அவைகளுக்கு வழங்கப்பட்டு வருகின்றன.

ஒவ்வொரு பொருளின் வடிவங்களையும், செயல்களையும் அனுபவங்களையும் நீக்கிவிட்டு ஆழ்ந்து பார்த்தால், நம் உயிருக்குள் உயிராக இருக்கிற அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே அங்கும் இருப்பதைக் காணலாம்.

நிலையான ஐந்தொழிலைச்செய்வதற்காகவே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் எல்லாப் பொருள்களின் உள்ளேயும் இருந்து கொண்டு வெளிப்படுவதும், மறைவதுமாயிருக்கிறுர் என்பதையும் தெரிந்துகொள்ளலாம்.

அருட்பெருஞ் ஜோதிதான் எங்கும் எல்லாப் பொருள்களிலும் தோற்றுகிறது. அருட்பெருஞ் ஜோதியின் அருளிஞலேதான் அருட்பெருஞ் ஜோதியை நம் உள்ளே நாம் கண்டுகொள்ளவும் முடிகிறது.

இதை உணராமல் வெளியில் உள்ள பொருள்களில் இறைவனைக் காண விரும்பிஞல், அந்தப் பொருள்களின் மீது

தான் பற்று உண்டாகும். இந்தப் பற்றினல் நம் உள்ளே இறைவன் இருக்கிருன் என்ற உண்மை மறந்துவிடும்.

நம் உள்ளேயே இறைவன் இருக்கிருன். வெளியில் உள்ள பொருள்களின் தோற்றங்கள் எல்லாம் நம் உள் இருக்கும் இறைவனை நாம் உணர்ந்தற்காக இறைவனுல் தோற்றுவிக்கப்பட்ட அற்புதங்கள் என்பதை மறந்துவிடக்கூடாது.

நம்உள் இருக்கும் இறைவனை முதலில் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். அவனுடைய தோற்றங்களாகவே மற்ற உயிர்களை எண்ணி அவைகளுக்குப் பரோபகாரப் பணி செய்து கொண்டிருக்க வேண்டும்.

இதுதான் நமதுகடமையாகும்.

நம் உள் இருக்கும் இறைவன் தம் அருட் பெருஞ் செயலை நாம் அறிந்து கொள்வதற்காகவே உலகில் நாம் காணும் பொருள்களிலும், அதன் செயல்களிலும் தோன்றி நமக்கு உதவி செய்துகொண்டிருக்கிருர்.

இந்த உண்மையை உணர்ந்து நாமும் நம்மைச் சூழ்ந்திருக்கும் எல்லா உயிர்களுக்கும் விருப்பு வெறுப்பு இன்றி உதவி செய்துகொண்டே இருக்க வேண்டும்.

இதுதான் அருள்நெறிப் பயிற்சி. இதன் மூலமாகத்தான் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவனை அடைய முடியும்.

# திருப்பள்ளி எழுச்சியின் பயன்

சத்விசாரம் செய்து வருவதன் மூலமாக நம் உள்ளேயே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் இருப்பதை உணரலாம். இப்படி உணரும்போதுதான் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் அருள் ஒளியே நம் அறிவின் அறிவாக, நம் உயிரின் உயிராக இருக்கும் உண்மையை அறிந்துகொள்ள முடியும்.

தயா ஒழுக்கத்தோடு இருந்து உயிர்க்குலத்துக்குப் பரோபகாரப் பணி செய்து வந்தால், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் நம்உள் விளங்கும் இடத்தையும் நாம் தெரிந்து கொள்ளலாம். அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் திகழுகின்ற இடம் இது என்று அருள் அறிவால் அறிவதுடன், அதை அனுபவிக்கவும் ஆரம்பித்துவிடலாம்.

நம் உடலில் உயிருக்கு உயிராக இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் எழுந்தருளி விளங்கும் இடம் நம் சிரநடுவே இருக்கும் பகர வடிவப் பீடம். அந்த இடத்தைத் தான் திருப்பள்ளி என்று சொல்வார்கள். இந்தத் திருப்பள்ளியில்தான் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் இருக்கிறார்.

நம் உடல் படைப்பில் முதன் முதலில் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் செயல்பட்டு, உயிரை மலர்த்தி, அதைச் சூழ உடலை வளர்த்துக்கொண்ட இடம்தான் நம் சிரநடுவில் இருக்கும் பகரவடிவப் பீடமான திருப்பள்ளி.

அருட்பெருஞ் ஜோதியின் அருள் உணர்வை ஒருவர் பெற்று ஒருமையோடு புருவ மத்தியில் மனதை நிறுத்தி உள்

நோக்கினல், சிரநடுவில் இருக்கும் திருப்பள்ளியில் அருட் பெருஞ் ஜோதி விளங்குவதைக் காணலாம்.

சிரநடுவில் அருட்பெருஞ் ஜோதி விளங்குகின்ற காட்சி பரோபகார உணர்வு இல்லாத மனே பாவனையினலோ, மற்ற புறக் கருவிகளினுலோ காண முடியாது.

நம் திருப்பள்ளியில் விளங்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் முன் மனத்தை நிறுத்தி தயா ஒழுக்கத்துடன் சத்விசாரம் செய்து வரவேண்டும். அதற்குத் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் துணைபுரியும். திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களை ஒருமை உணர்வுடன் பாடுவதன் மூலமாக நம் திருப்பள்ளியில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை எழுந்தருளப் பண்ணிக்கொள்ளலாம்.

இவ்வாறு எழுந்தருளும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் திருவடிகளைப் பணிந்து போற்றி வரவேண்டும். நான் என்னும் ஆணவத்தை முற்றும் துறக்க வேண்டும். அப்போது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரோடு ஆண்டவராகி நிற்கும் அனுபவம் நமக்குக் கிடைக்கும்.

இது சாதகருக்குக் கிடைக்கும் முதல் அனுபவமாகும்.

இவ்வாறு அருட்பெருஞ் ஜோதியுடன் ஒன்றியிருந்து ஒருமையும் தயவும் கொண்டு வாழும்போது அருட்பெருஞ் ஜோதி சந்நிதி விசேஷத்தால் நமக்குப் பல அற்புதச் சித்துகள் செய்யும் ஆற்றல் உண்டாகும். இது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் திருஉள்ளத்தால் நமக்கு ஏற்படும் அருள் சக்தி.

நமக்குக் கிடைத்துள்ள அருள் சக்தி திருப்பள்ளி எழுச்சியால் ஏற்பட்ட பயன் ஆகும். இந்த அருள் சக்தியைப் பெற்று பல அற்புதச் சித்துகளைச் செய்து இன்புறுதற்காக மட்டும் நாம் திருப்பள்ளி எழுச்சியை மேற்கொள்ளக் கூடாது என்பது வள்ளலாரின் சுத்த சன்மார்க்கம்.

நம் முன்னேர்களின் ஞான மார்க்கமோ பல அருள் அற்புதங்களைச்செய்து இன்பம் பெறுவதே திருப்பள்ளி எழுச்சி

யின் நோக்கமாக இருந்தது. அவர்கள் பல அற்புதச் சித்துக்களைச் செய்து அந்த இன்பத்தையே அருள் இன்பமாக அனுபவித்து மன நிறைவு பெற்றார்கள்.

பக்தி மேலீட்டால் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் பாடிப் பயன்பெற்றவர்கள் பலர்.

மாணிக்கவாசகர் மட்டும் இல்லாமல், இன்னும் பல சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் பல திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களைப் பாடி இருக்கிறார்கள்.

இவைகள் எல்லாம் கடவுள் அருள் ஒளியை அவர்கள் உள்ளக் கோயிலில் எழுப்பு வதற்கு மட்டுமே பயன்பட்டன.

மாணிக்கவாசகர் தம் உள் உறங்கிக் கிடந்த சிவபரம் ஜோதியைத் திருப்பள்ளி எழுச்சிப் பாடலால் தட்டி எழுப்பிக் கொண்டார். இதன் மூலமாகப் பல அற்புத சித்துக்களைச் செய்யும் ஆற்றலைப் பெற்றார்.

மனித குலத்தின் மீது அவருக்கு இருந்த அன்பினால் ஏற்பட்ட இன்பத்தைத் திருவாசகமாகப் பாடி அருளினார். சிவானந்த அனுபவத்தில் மூழ்கித் திளைத்தார்.

முடிவில் தொல்லைதரும் பிறவித் தளையை நீக்கி எல்லையில்லாத் தில்லைப் பெருவெளியில் கலந்து கொண்டார்.

இதையே சைவ உலகம் போற்றிக்கொண்டு இருக்கிறது.

திருஅருட் பிரகாச வள்ளலாரோ மாணிக்கவாசகருக்கும் மேலே சென்றவர். மாணிக்கவாசகர் கண்ட சிவபரஞ் ஜோதியை அருட்பெருஞ் ஜோதியாகக் கண்டவர்.

அதன் தனிப்பெருங் கருணையைக் கொண்டு உயிர்க் குலத்துக்குப் பணிபுரியும் ஒப்பற்ற ஆற்றலை வேண்டிப் பெற்றுக் கொண்டவர்.

வள்ளலார், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தம் சிரநடுவில் இருக்கும் பகர பீடமான ஞானசபைத் திருப்பள்ளியிலே விளங்கும் காட்சியை முதலில் கண்டுகொண்டார்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தம் திருப்பள்ளியில் வீற்றிருக்கும் நிலையைக் கண்டவுடன் பல அற்புதச் சித்துகளைச் செய்யும் ஆற்றலைப் பெற்றார்.

இந்த அருள் ஆற்றலே போதும் என்று மற்ற ஞானியர் களைப்போல அவர் திருப்தி அடைந்துவிடவில்லை.

மேலும் மேலும் திருப்பள்ளி எழுச்சிப் பாடலைத் தொடர்ந்து பாடினர். திருஅருட்பிரகாச வள்ளலார் இவ்வாறு திருப்பள்ளி எழுச்சிப் பாடலைத் தொடர்ந்து பாடியதின் உண் மையையும் அதன் தனிச் சிறப்பையும் நாம் முதலில் அறிந்து கொள்ள வேண்டும்.

மற்றவர்கள் பாடிய திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் அவர்கள் தலைவர்களின், தெய்வங்களின் புற வண்ணங் களைக் கண்டு பாடப்பட்டவையாகும்.

வள்ளலாரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களோ ஆண் டவரது இயற்கை உண்மையையும், இயற்கை விளக்கத்தை யும், இயற்கை இன்பதையும் உள்ளபடியே கண்டு உணர்ந்து அனுபவித்துப் பாடப்பட்டவை.

அவை வேறு எதையும் விரும்பிப் பாடப்பட்டவை அல்ல. அருட்பெருஞ் ஜோதியின் பரிபூரண அருள் ஒன்றை மட்டுமே வேண்டிப் பாடியவை யாகும்.

அப்படிப் பாடி இறைவனின் பரிபூரண அருளைப் பெற்றுக்கொண்டவர் வள்ளலார்.

கடவுள் எந்த இடத்திலும் எந்தக் காலத்திலும் தூங்கிக் கொண்டிருப்பதில்லை. அவர் நிலையான விழிப்புடன் என்றும் நிலைத்து இருப்பவர். ஒவ்வொன்றின் உள்ளேயும் மறைந்து நிற்பவர். தம் அனக அருட்செயலால் ஐந்தொழில்களையும் இடைவிடாமல் செய்துகொண்டு இருப்பவர்.

இவ்வாறு இருக்கும் முழுமுதற் கடவுளை, அவர், தம் உள்ளே உறங்கிக் கொண்டிருப்பதாக ஏன் கற்பித்துக்கொண் டார்கள்? வெறும் புலன் இச்சையே வாழ்க்கை என்று எண் ணிக்கொண்டிருக்கும் மனித உள்ளங்களைத் தட்டி எழுப்பி உண்மையான வாழ்க்கையை க் காண்பிப்பதற்கே ஆகும்.

நம் முன்னோர்கள் திருப்பாற் கடலில் திருமால் பள்ளி கொண்டிருப்பதாகக் கற்பனை செய்திருக்கிறார்கள். இந்தக்

கற்பனை அவன் பேர் அருளை அடைவதற்காகச் செய்து கொண்டதுதான். நிலையான விழிப்புடன் இருக்கும் இறைவனைப் பள்ளிகொண்டிருப்பதாக எண்ணி அவரைப் பள்ளி எழப் பாடுவது அவரை எழுப்புவதற்காக அல்ல. இயற்கை உண்மை இது என்று அறியாமல் உறங்கிக்கொண்டிருக்கும் மனிதனை உள் விழிப்பு அடையச் செய்வதற்குத்தான்.

வள்ளலார் வழங்கியுள்ள சுத்த சன்மார்க்கத் திருப்பள்ளி எழுச்சி சுத்த சத்விசாரத்தால் முதலில் நெற்றிக்கண்ணைத் திறப்பித்துக்கொள்வதாகும்.

இந்த விழிப்பு உண்டானவுடன் மனம் ஒருமைப் படுவதும், உண்மைக் கடவுள் காட்சியை நேருக்கு நேரே பார்த்து அனுபவிப்பதும் சாத்தியமாகும்.

வள்ளலார் தம் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களால் முதலில் உபநயன விழிப்பு உண்டாகி உள் ஒளியைப் பெற்று எழுச்சிகொண்டார்.

அருட்பெரும் ஜோதியின் திருப்பள்ளி எழுச்சி தம் உள் ஏற்பட்டதன் பயனைத் தம் தேகம் உள்ள வரையில் புகழோடு திகழவோ, எங்கும் நிறைந்திருக்கும் அரும்பெரும் ஜோதியின் அற்புத ஆனந்த வடிவத்தைக் கண்டு இன்புற்று அதனுடன் கரைந்து போகவோ அவர் ஒருபோதும் விரும்பவில்லை.

பரோபகாரப் பணியுடன் கூடிய சத்விசாரத்தால் தம் உள் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை உணர்ந்து கொண்ட பின்னரும் அவரை மேலும் பள்ளி எழப் பாடுகிறார்.

ஏன் அவ்வாறு பாடுகிறார்?

இதுவரையில் தம் உள் மறைந்து இருந்து எல்லாவற்றையும் ஆண்டு வந்த அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தம் மறைப்பை நீக்கிக்கொண்டு தம்உள் இருந்து வெளிப்பட்டு அனகமாவதற்காகவே மேலும் பாடுகிறார்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரும் அவர் உள் இருந்து வெளிப்பட்டு அவரிடம் அனகமாகிறார்.

வள்ளலார் தம் உடம்பின் உள்ளே இருக்கும் அருள் ஒளியை விழிப்புடன் வைத்துக்கொள்வதற்கு வேண்டிய

உபாயத்தைத் தெரிந்துகொள்கிருர். அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வள்ளல் பெருமானுக்குத் தம் பூரண ஆற்றலுடன் காட்சி தருகிருர். அவர் விரும்பிய வண்ணம் அவரை ஆட் கொள்ளவும் செய்கிருர்.

இந்த நிலேயிலும் வள்ளலார் திருப்பள்ளியெழுச்சிப் பாடலேத் தொடர்ந்து பாடுகிருர்.

அவர் உள்ளே ஒடுங்கி இருக்கும் அருட்பெரும் ஜோதி யின் தன்மை வெளிப்பட்டு அனகமாகிறது. வள்ளலாருக் குப் பூரண அருளேயும் வழங்குகிறது.

இதனுல் உள்ளும் புறமும் பரிபூரணமாக நிரம்பியிருக்கும் அருட்பெரும் ஜோதியின் அனக அருள் அனுபவத்தை வள்ளலார் பெறுகிருர்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவருடன் இணேந்து வாழ வும் முற்படுகிருர்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தன் தனிப் பெருங் கருணேயினுல் அவருக்கு நிலேத்த அனக வாழ்வை வழங்கு கிருர். அநித்தியமான அவர் தூல உடம்பை நித்தியமான சுத்த பிரணவ ஞான உடம்பாக மாற்றி அருள்கிருர்.

ஞான உடம்பைப் பெறுவதுதான் மரணமிலாப் பெரு வாழ்வு. இந்தப் பெருவாழ்வைப் பெறுவதற்காகத்தான் வள்ளலார் சுத்த சன்மார்க்கத் திருப்பள்ளி எழுச்சிப் பாடலேத் தொடர்ந்து பாடி வந்தார். அதில் வெற்றியும் பெற்ருர்.

திருப்பள்ளியில் இருந்து எழுந்து நித்தியமான அனக அருள் புரிகின்ற அருட்பெருஞ் ஜோதி ஆண்டவருடன் வள்ளலார் ஒன்றிவிடுகிருர்.

அவரை அனுபவித்துக் கொண்டுவாழும் பெரு வாழ்வை மனிதகுல வரலாற்றிலேயே முதன் முதலாக அருட்பெருஞ் ஜோதியின் அருளால் பெற்றுக்கொள்கிருர்.

பெறற்கரிய அனக ஆனந்தப் பெரு வாழ்வை முழுமை யாகப் பெற்றவர் திருஅருட்பிரகாச வள்ளலார்.

இதைப்பெறுவதற்கு முன்னுல் அவர் தம்மை முழுவது மாக அருட்பெருஞ் ஜோதி ஆண்டவருக்கே அடைக்கல மாகக் கொடுத்து விடுகிருர்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் விருப்பப் படியே எல்லாம் நடக்கட்டும் என்று தம்மை முழுவதுமாக அவருக்குச் சமர்ப்பித்துவிடுகிருர்.

அதனுல் அவரிடம் இருந்த தான் என்ற போதம் போய் விடுகிறது. அவர் இறைவனுடன்ஒன்றி நிற்கிருர்.

இந்த அருள் அனக அனுபவத்தைத்தான் மூன்ருவது பதிகமான பற்றறுத்தலில் வள்ளலார் பாடி இருக்கிருர்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் திருஉள்ளப்படிதான் எல்லாம் நடக்கும். திருஅருட்பிரகாச வள்ளலாரின் உள்ளத் திலிருந்து அனகமுற்றுத் திகழ்கின்ற அருட்பெரும் ஜோதி யின் அருள் செயலால் உலகம் வள்ளலாரையே சுத்த சன் மார்க்கத் தலைவராகக் கொள்ளும்.

ஆண்டவருடைய ஐந்தொழில் செயலும், அருட் பிரகாசவள்ளல் பிரானின் செயலாகவே திகழும்.

இதுவரை கடவுளுக்கு இந்தத் தூலப் பிரபஞ்சம் உருவத் திருமேனியாக இருந்தது.

அகம் மறைந்து புற உலகத்துக்குக் காரணமாயிருந்த அருள் சக்தியே அவர் அருவத் திருமேனியாக இருந்தது.

அருவ அருள் சக்தியும் உருவப் பேருலகமும் ஆக விளங்கிய அறிவு உணர்வே ஆண்டவரின் அருஉருவத் திரு மேனியாக இருந்தது.

வள்ளலார் அருட்பெரும் பேறுபெற்ற தருணத்தில் இறை வனின் அருஉருவத் திருமேனி அருட்பெருஞ் ஜோதி உணர் வாகவே அவரிடம் திகழ்ந்தது.

அருட்பெரும் ஜோதியிடமே தான் என்ற போதத்தைக் கரைத்துவிட்டு, அதனிடமே பூரணமாகப் புகலடைந்த வள்ளலாருக்குத் திருஅருட் பிரகாசமே திருஉடம்பாயிற்று.

இதனுல் கடவுளின் அருஉருவத் திருமேனியை எல்லாரும் அடைந்து பெருவாழ்வு பெறலாம் என்ற வாய்ப்பு இப்போது ஏற்பட்டிருக்கிறது.

எல்லாம்வல்ல அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே திரு அருட்பிரகாசர் வடிவத்தில் சுத்த தேகமும்,பிரணவதேகமும் ஞான தேகமும் பெற்றுத் திகழ்கிருர்.

இதுவரை உலகம் அறியாது இருந்த அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் இப்பொழுது திருஅருட் பிரகாச வள்ளலார் வடிவத்தில் அனகமுற்று விளங்குகிருர்.

அவரது அனக அருள் நெறியே சுத்த சன்மார்க்கமாகவும் அமைந்திருக்கிறது.

இந்த அருட்பெரும் நெறியை நாம் மேற்கொண்டு வாழ்ந்து வருவோமாகுல் கடவுள் உண்மையை உணர்ந்துகொள்வதுடன் அவர் அருளேயும் பெற்று ஞான தேகத்துடன் மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம்.

அருட்பெரும் ஜோதி! அருட்பெரும் ஜோதி!
தனிப்பெருங் கருணே! அருட்பெரும் ஜோதி!

---

## சத்திய அறிவிப்பு

ஐயன்அருள் வருகின்ற தருணம்இது கண்டீர்
ஐயம்இலை ஐயம்இலை ஐயன்அடி ஆணை
மெய்யன்எனை ஆட்கொண்ட வித்தகன்சிற் சபையில்
விளங்குகின்ற சித்தன்எலாம் வல்லஒரு விமலன்
துய்யன்அருட் பெருஞ்ஜோதி துரியநட நாதன்
சுகஅமுதன் என்னுடைய துரைஅமர்ந்திங் கிருக்க
வையமிசைத் திருக்கோயில் அலங்கரிமின் விரைந்தே
மணியாலும் பொன்னாலும் மலராலும் வியந்தே !

—திருஅருட்பா-5815.

ஏ. பி. டி. பார்சல் சர்வீஸ்,
11/231-பி, டாக்டர் நஞ்சப்பா ரோடு,
கோயமுத்தூர் - 641018.



## அனுபவ மாலை

அரும்பொன் அனை யார்எனது கணவர்வரு தருணம்
ஆயிழைஈ தாதலினுல் வாயல்முகப் பெல்லாம்
விரும்புறுதோ ரணம்கொடிகள் பழுத்தகுலை வாழை
விரைக்கமுகு தெங்கிளநீர் எனைப்பலவும் புனைக
கரும்புநெல்லின் முளை நிறைநீர்க் குடம்இணைந்த கயலும்
கண்ணுடி கவரிமுதல் உண்ணுடி இடுக
இரும்பொடுகல் ஒத்தமனங் களும்கனிய உருக்கும்
இறைவர்திரு வரவெதிர்கொண் டேத்துவதற் கினிதே.

—திருஅருட்பா-5733.

தி ஆனைமலைஸ் ரிட்ரெடிங் கார்ப்பரேஷன்,
42, மவுண்ட். ரோடு,
சென்னை - 600 032.

## இறை எளிமை

கரும்பின்மிக இனிக்கின்ற கருணைஅமு தளித்தீர்
கண்ணனையீர் கனகசபை கருதியசிற் சபைமுன்
துரும்பின்மிகச் சிறியேன்நான் அன்றுநின்று துயர்ந்தேன்
துயரேல்என் றெல்லையிட்டீர் துரையேஅவ் வெல்லை
விரும்புறஆ யிற்றிதுதான் தருணம்இந்தத் தருணம்
விரைந்தருள வேண்டுமென விளம்பிநின்றேன் அடியேன்
பெரும்பிழைகள் அனைத்தினையும் பொறுத்தருளி இந்நாள்
பெரிதளித்தீர் அருட்பெருமை பெற்றவளில் பெரிதே

—திருஅருட்பா-4755.

---